# Vyasa Bodhini.

(Second Part)

BY

K. Vadivelu Chettyar.



1916.

Price. As 4.

போலும் தந்தைபோலு மிருந்து எல்லா வுயிர்களுக்குங் கருணை செய்கின்றாரென்பது தாய் தந்தையரை பிரத்யட்ச தெய்வமாக அறிந்து வழிபடுபவர்க்கன்றி மற்றையவர்க்கு ஒரு வாற்றானும் விளங்குவதில்லையாம்.

உடம்பு செவ்வையாக விருந்தாற்றான் உணர்வு செவ்வையாக விருப்பதாம். உடம்பு வாத பித்த முதலிய நோய்களாலோ உணவின்மை முதலியவற்றாலோ துன்புறும் போது உணர்வு நன்னிலை பெறாது கலக்க முறுவது நம்மனோர்க்கு நன்கு விளங்கிய விஷயமாம். உடம்பை நன்றாகப் பாதுகாத்து வளர்த்து வருபவர்தாம் உணர்வை நன்றாகப் பாதுகாத்து வளர்ப்பதற் குரியவராவர். உடம்பினை வளர்ப்பது உணர்வினை வளர்ப்பதற்குக் காரணமாம்; உணர்வினை வளர்ப்பது இகலோக சுகத்தையும் பரலோக சுகத்தையும் மோட்சத்தையு மடைவதற்குக் காரணமாம். நமது உடம்பைப் பிறந்தபோது கண்ணுங்கருத்துமா யிருந்து வளர்த்தவர் யார்? பின் நமது உணர்வினைக் கண்ணுங்கருத்துமாயிருந்து வளர்த்தவர் யார்? என்று நன்கு சிந்தித்து நோக்குவோர்க்கு அவர் முறையே தாயும் தந்தையுமாவ ரென்பது நன்கு விளங்கும். உடம்பை வளர்த்தாலன்றி உணர்வை வளர்த்தல் கூடாமையின், உடம்பை வளர்க்கும் தாயை முன்னும் உணர்வை வளர்க்கும் தந்தையைப் பின்னும் வைத்து அவரிருவரும் முன்னறி தெய்வ மென்று கூறப்படுகின்றனர். பிள்ளைகளைத் தாய் அமுதூட்டிச் சீராட்டிப் பாராட்டி வளர்த்து வருகின்றதையும், தந்தை தவிர் காரியத்திற் செல்லுதலைத் தடுத்துச் செய் காரியத்திற் செலுத்தி வருகின்றதையும், நாம் நன்றாகக் கவனித்து நோக்குவோமாயின், அவர்கட்கு அன்னை த

தையரன்றி மற்றவர் முன்னறி தெய்வங்க ளாகா ரென்பது மாறுபாடின்றி விளங்குவதாம்.

தாய் உடம்மை பமுதூட்டிச் சீராட்டிப் பாராட்டி வளர்த்தும், தந்தை தனிர்காரியத்திற் செல்வ தொழித் துச் செய்காரியத்திற் செலுத்தி அறிவை வளர்த்தும் வந்தமையாற்றான், நாம் உபாத்தியாயர் வாயிலாக பல விஷயங்களை யறிவதற்குரியவ ராகின்றோம். தாய் தந்தை யர் நம்மைப்பற்றிக் கவலைகொள்ளாது அசட்டையாக விருந்து விடுவாராகளாயின், நாம் முன்னுக்கு வரு வது எவ்வாற்றலாம்? அப்பிரத்தியட்சமாய தெய்வத் தை யறிவதற்குரிய வழியைத் தாய் தந்தையர் பிரத் தியட்ச தெய்வமாக விருந்து காட்டுகின்றனர். எத் தாய் தந்தையர்க்கும் பிள்ளை நோயுடையவனாகவும், தெய்வபக்தியில்லாதவனாகவும், கல்வியறி வில்லாதவனா கவும், வறியவனாகவு மிருக்க விருப்பமில்லையா ... பது சிறிது கவனித்துப் பார்த்து வருவோமா..., விள ங்குவதாம். தம்முடைய பிள்ளையுபி... விருத்தியி லேயே கண்ணுங்கருத்துமாக ...ந்துவரும் தாய் தந் தையர் போலப் பிரத்...ச தெய்வம் வேறு யவரிருத் தல் கூடும்? இப்பிரத்தியட்ச தெய்வத்திற்கு வணக்க முடையவராக ஒழுகுகின்றவர் அப்பிரத்தியட்சமான கடவுளருளுக்குப் பாத்திரராவது தவறுததாம். ஆசா ரக்கோவை "தந்தையுந் தாயுந் தொழுதெழுக" என்று கூறுவது மேற்கூறியதை வற்புறுத்துவதாம்.

பிள்ளைகள் தாயை யுணர்ந்த பின்னரே த...தையை யுணருகின்றவராக விருத்தலால்,முன்னறிதெய்...களா கிய தாய் தந்தையர்களுள் தாய் முன்னர் மு...றி தெய்வமென்றும்,தந்தை பின்னர் முன்னறிதெய்வ...

றும் உணர்தல்வேண்டும். தாய் தந்தையரை முன்னறி தெய்வமாகக் கொள்வதாவது அவர்களைப் பிரத்தியட்ச தெய்வமாகவெண்ணி வழிபாடுசெய்து வருவதாம். தாய் தந்தையர் உயிருடனுள்ள காலத்தன்றி யிறந்த காலத்தி லும்அவர்களை மறவாது போற்றிவருவதே நல்ல பிள்ளை களின் இலக்கணமாம். 'அன்னையும் பிதாவு முன்னறி தெய்வம்' என்று ஔவைப் பிராட்டியா ரருளியதன் மேன்மை குறிப்புவகையாகத் தமது தாய் தந்தையரின் பெயர் விளங்க "அகர முதல வெழுத்தெல்லா மாதி பகவன் முதற்றே யுலகு" என்று திருவள்ளுவர் தமது நூலின் முதற்குறளிற் கூறியிருப்பதனால் நன்கு விளங் கும். (திருவள்ளுவர் தாயின்பெயர் ஆதியாம், தந்தை யின்பெயர் பகவனாம்).

பாரதம் ஆரண்ய பருவத்திலுள்ள தர்மவியாதன் கதையைப் படித்துப் பார்ப்பவர்க்கு அன்னையையும் பிதாவையும் முன்னறி தெய்வமாகக் கொண்டொழுகு வது ஒவ்வொருவர்க்கும் இன்றியமையாத கடமையே யென்பது இனிது விளங்கும்.

கூர்ம புராணம்.

"தாயினிற் சிறந்த தெய்வ மில்லையுந் தந்தை யின், நயநற் குருவு மில்லை".

காசிகாண்டம்.

"தன்னுதாய்ப்பணியில் செய்யுந் தவமலாற் றவம்வே றில்லை மைந்தருக்கதிக ளெனும் வணங்குவர் தாயைத் தந்தை அந்தமைந்தனையே போற்றல் வேண்டுமற் றூத றன்னால் இன்னையுமுணைரிற் றாயே தந்தையிற் சிறந்தாள் மன்னோ."

என்பன இங்குக் கவனிக்கற் பாலனவாம்.



# 2. ஆலயந் தொழுவது சாலவு நன்று.

உலகந் தோன்றிய நாள் முதற்கொண்டு இதுகாறும், கடவுள் ஒருவருண்டு; அவர் தம்மையன்போடு வழிபாடு செய்கின்றவர்க்கு அவரவர் பக்குவத்திற்கேற்பப் புத்தியையும் முத்தியையும் அருளுகின்றாரென்னும் நம்பிக்கையுடையார் யாவரும் கடவுளை யேகாந்தமான விடத்திருந்து தியானித்து வருகின்றனரென்பது மிகு பிரசித்தமாய விஷயமாம். கடவுள் அப்பில் உப்புப்போன்று எங்கும் ஏகரசமாய் விளங்குகின்றாராயினும், அவரை நினைத்த விடத்தில் தியானிப்பது நம்மனோர்க்குக் கூடாததாமென்றுகருதி, உலகியல்பு, உயிரியல்பு, கடவுளியல்பு முதலியவற்றை நன்குணர்ந்த பெரியார் காலதேச நிமித்தங்கட்கேற்றவாறு வெவ்வேறு திறத்தினவாய ஆலயங்களை யேற்படுத்தினார்கள். ஒவ்வோர் ஆலயத்தையும் நாம் நன்கு கவனித்துப் பார்ப்போமாயின், அஃது ஏதோ ஒரு பெரிய தத்துவத்தை விளக்குவதற்காகவே அமைக்கப்பட்டதென்பது நமக்கு நன்கு விளங்குவதாம். ஆரியர்கள் வழிபாடு செய்யும் ஆலயங்களுட் சென்று அங்குள்ள அமைப்புக்களை நோக்குவோமாயின், அத்தத்துவம் மிக எளிதில் விளங்கும். சிவாலயத்தில் துவஜஸ்தம்ப மிருப்பதையும், நந்தி சிவலிங்கத்தை நோக்கியிருப்பதையும் சிறிதுற்று நோக்குவோமாயின், கடவுளைத் தியானிக்கும்போது துவஜஸ்தம்பம் போன்று அசையாதிருத்தல் வேண்டும்; நந்திபோன்று மனம் கடவுளை நோக்கியிருத்தல் வேண்டுமென்றற் றொடக்கத்தன விளங்குவனவாம். இவ்வாறே ஒவ்வோரமைப்பும் நமக்குக் கடவுளை வழிபாடு செய்யும் முறைகளை நன்கு

விளக்குவதாக இருக்கின்றது. இத்தத்துவங்களை நன்கு உணராதவர்கள் ஆலயங்கட்குச் சென்று கடவுளை வழிபடுவதுபற்றி அருவருப்புக் கொள்ளுகின்றனர். ஆலயத்திற்குச் சென்று கடவுளை வணங்குவதெதற்கு? வீட்டிலிருந்தே கடவுளை வணங்குவது கூடாதோ வெனின் வீட்டிலிருந்து கடவுளை வணங்குவது நம்மனோர்க்குப் பெரும்பான்மையும் அமையாததாம்.

வீட்டிலிருக்கும்போது நம்மனோர்க்குப் பெரும்பான்மையும் குடும்பத்தைப் பற்றிய கவலையே யுண்டாவதன்றிக் கடவுளைப் பற்றிய சிந்தனை யுண்டாவதில்லை யென்பதற்கு ஒரு சாட்சியும் வேண்டுவதில்லையாம். நாம் வீட்டிலிருக்கும்போது என்ன செய்கின்றோம்? எதைப்பற்றிப் பேசுகின்றோம்? எதனை நினைக்கின்றோமென்று சிறிது கவனித்துப் பார்ப்போமாயின், அவையெல்லாம் பெரும்பான்மையும் குடும்பத்தைப் பற்றியனவாகவே யிருக்குமென்பது பிறழாது விளங்கும்.

குடும்பக் கடலுள் மூழ்கிப் பரலோகத்தையடைவது பற்றிச் சிறிதுஞ் சிந்தனைசெய்யாது தம் வாழ்நாளை வீணாகக் கழிப்பவர்கள் சில போதாவது கடவுளை வழிபட்டு நற்கதி யடைவார்களாக என்னும் நற்கருத்துடன் பெரியோர்கள் ஆலயங்களை யேற்படுத்தினர். இவ்வாலயங்களை யேற்படுத்திய காலத்தை வரையறுத்துக் கூறுவது ஒருவாற்றானும் முடியாததாம்.

கடவுளொருவருண்டு; அவர் தவறு செய்பவரைத் தவறாது தண்டிப்பவர்; அவர் தம்மை யன்போடு வழிபடுகின்றவர்கட்கு அவர் விரும்பியவற்றையெல்லாந் தகுதியறிந்து தருகின்றாரென்னுந் தீர்மானமுடையவரில்லாத

காலமின்மையின், ஆலயமில்லாத காலமுமில்லையாம். மேற்கூறிய கிர்மானமுடையவர் கடவுளை வழிபாடுசெய்ய ஏற்படுத்திய இடமே ஆலயமாம். இவ்விடத்தை வீட்டின்கண் ஏற்படுத்தாது பலவாற்றானும் தகுதியில்லாமை நோக்கி ஒரு தனியிடம் அதற்கென் றேற்படுத்தப்பட்டது. இவ்வா றேற்படுத்திய இடம் ஆலயமென்று தொன்று தொட்டுச் சொல்லப்பட்டு வருகின்றது. சூரியனைச் சுற்றிப் பூமி சுழலுதலும், பூமியைச் சுற்றிச் சந்திரன் சுழலுதலும், இவைபோன்ற பிறவும் எவ்வாறு தொன்று தொட்டு நிகழ்ந்து வருகின்றனவோ, அவ்வாறே ஆலய வழிபாடும் தொன்று தொட்டு நிகழ்ந்து வருவதா மென்பது மக்களியல்பினை நோக்கினால் நன்கு விளங்குவதாம்; ஆனால், அவ்வாலயங்களும் வழிபாடுகளும் காலதேச நிமித்தங்கட்கேற்றவாறு பல திறத்தன வாக இருப்பனவாம். இவை பல திறத்தனவாக விருப்பினும், இவற்றின் நோக்கம் கடவுளை யடைவதையே முக்கியமா யுணர்த்துவதாக விருத்தலின், எவ்வாலயத்தையும் எவ்வழிபாட்டையும் ஒருவகையானும் நிந்திப்பது கூடாது. எம்மதத்தர் ஆலயமும் கடவுளை வணங்கி அவரை யடையும் வழியைக் குறிப்பு வழியாக வுணர்த்துவதாக அமைந்திருத்தலின், பிறர் வழிபடும் ஆலயத்தை மறந்தும் இகழுதல் செய்யாது, நாம் நமக்கென் றேற்படுத்தியுள்ள ஆலயத்திற்குச்சென்று குடும்பக் கவலை யொழியக் கடவுளை மனமொழி மெய்கள் மூன்றும் ஒருமுகப்பட்டு நிற்க வணங்கிவருதல்வேண்டும். நாம் கடவுள் அநந்தரா (முடிவற்றவரா)யிருத்தலின், அவரை வழிபடுதற்குரிய மார்க்கங்களும் அநந்தமாயிருக்கின்றன; நதிகளனைத்திற்குங்

கடலே முடிவிடமாக விருப்பது போல மார்க்க மனைத்திற்கும் கடவுளை முடிவிடமாக விருக்கின்றாரென்று நிச்சயித்து, அவ்வாறு வணங்கி வருவோமாயின், மனம் ஒருமுகப்படுவது பெற்றுக் கடவுளருளுக்குப் பாத்திர ராதற் குரியவராவோம்.

நாம் நம் வீட்டிலிருந்து கடவுளைக் குறித்த நேரத்தில் வழிபாடு செய்தல் கூடாதோ ? ஆலயத்திற்கேன் போதல் வேண்டுமென்று வினவுதல் கூடும். இங்கு வீடு என்னும் பதம் விடுதலை யென்னும் பொருளுடையதாக விருப்பினும், அது நமக்குப் பந்தத்தையே மேலும் மேலும் விளைவிப்பதாக விருத்தலின், அதன்க ணிருந்து எவ்வாறு கடவுளைச் செவ்வையாக வழிபடுதல் கூடும் ? வீட்டினை நன்றாகக் கட்டல்வேண்டும்; வயலுக்கெருவினை நன்றாகப்போடல் வேண்டும் என்றற் றொடக்கத்து விய வகாரத்தை நெய்விட்ட நெருப்புப்போல வளரச்செய்து பந்தத்தை மிகுவிக்கும் வீட்டின்க ணிருந்து கடவுளை வழிபடுவது நம்மனோர்க்குமுடியாத காரியமாம்; ஆகவே, நாம் மனம் ஒருமுகப் பட்டுக் கடவுளை யடைதற் பொருட்டு ஆலயத்திற்குச் சென்று கடவுளைப் பெரியார் கூறிய வாறு வணங்குதல் வேண்டும் இங்குப் பெரியாராவார் முக்கியமாக நமது தந்தையாரேயாவர். அன்னையார் வாயிலாகத் தந்தையா ரிவரென்றறிந்தாற் போலத் தந்தையார் வாயிலாகக் கடவுளிவரென் றறிதற்குரியவராக இருக்கின்றோம். நம்மனோர்க்கு அன்னையார் தந்தையாரை யறிவிப்பதும், அவர் கடவுளை வழிபடு மார்க்கத்தை யுணர்த்துவதும், தொன்று தொட்டு நடைபெற்று வருதலின், நாம் கடவுளை வழிபடுமிடமாகிய ஆலயமும் தொன்றுதொட்டி ருத்தல் வேண்டுமென்பது சொல்லா

மலே விளங்குவதாம். தொன்று தொட்டு நடைபெற்று வரும் ஆலய வழிபாட்டால் விளையும் நன்மையை ஆஸ்திகர் யாவர்க்கும் ஞாபகப்படுத்துவதற்காகவே இன்ன ஆலயமெனக் குறிப்பிடாது பொதுவாக "ஆலயந் தொழுவது சாலவு நன்று" என்றருளிச் செய்தார், நம்ஞானத்தாயாகிய ஒளவைப் பிராட்டியார். ஆலயம் என்பதன் பொருள் தங்குமிடம் என்பதாம்; யார் தங்குமிடம் என்னும் வினவிற்கு விடை கடவுள் தங்குமிடம் என்பதாம்; அஃதாவது கடவுள் தங்குமிடமென்னும் பொருளுடையதாம் கோவில் என்னும் சொற்றொடராம். (கோ-கடவுள், இல்-இடம்). உயிர் உடம்புமுற்றும் வியாபித்திருப்பினும், இருதய கமலத்தின் (மனத்தின்) கண் விசேடமாக விளங்குவதுபோல, கடவுளும் உலக முற்றும் வியாபித்திருப்பினும் ஆலயத்தின்கண் விசேடமாகவிளங்குகின்றார். அவர் அங்கு விசேடமாக விளங்குவதாற்றான் பக்தியோடு வழிபடுபவரது மனம் அங்கு விரைவில் ஒரு முகப்படுகின்றது. சூரியனது கிரணம் சூரிய காந்தக் கண்ணாடிவாயிலாக விசேடமாக வெளிப்படுவது போல, கடவுளது கருணையும் ஆலயவாயிலாக விசேடமாக வெளிப்படுகின்றது. இப்பிறப்பின் பயனை ஆலயத்திற்குச் சென்று கடவுளை வழிபடாதவர் ஒருவகையானு மடைவதில்லையாம். புறத்தேயுள்ள ஆலயத்திற்குச் சென்று அங்கு உருவமாகவோ அருவமாகவோ இருப்பதாகப் பாவிக்கப்படுங் கடவுளை ஆசை கோபம் அகந்தை முதலியவற்றை யொழித்து, மனத்தாற் சிந்தித்து வாயால் வாழ்த்திக் காயத்தால் வணங்கினுற்றான், அகமாகிய (உடம்பாகிய) ஆலயத்தில் ஆநந்த சொரூபமாயெழுந்தருளி யிருக்குங் கடவுளை விரைவிற் காணுதல் வாய்ப்பதாம். கடவுள் சுத்தராகவிருப்பதால், நாம் அவரை

வணங்க ஆலயத்திற்குப் போகும்போது சுத்தராகவே போதல் வேண்டும். சுத்தமுடையார்க்கும் சுத்தமுடையார்க்குமன்றி, அசுத்த முடையார்க்கும் சுத்தமுடையார்க்குஞ் சிநேக முண்டாவ தொருபோதுமின்றன்றோ? நாம் ஆசை கோபம் அகந்தை முதலியவற்றால் அசுத்தராக விருக்குமளவும், கடவுளது சிநேகத்தைப் பெறுவது கூடாததாம். இதுபற்றித் தான் பெரியார் ஆலயத்திற்குப் போம்போது ஸ்நானஞ்செய்து, நல்லுடைதரித்து, நற்சிந்தையோடு போதல் வேண்டும்; அங்கு அசுத்தமாய செயல்களுள் ஒன்றுஞ் செய்தல் கூடாதென்று கட்டளை யிட்டனர்.

"வாழ்த்த வாயு நினைக்க மடநெஞ்சந், தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனை (கடவுளை)" மன மொழி மெய்கள் ஒரு முகப்பட்டு வணங்குவதற்கிடம் சிறப்புவகையாக ஆலயமன்றி மற்றொன்றுமாகாமையின், குறித்த காலத்தில் ஆலயத்திற்குச் சுத்தமாகச் சென்று சர்வ மதத்திற்குஞ்சாட்சியாக விருந்து அநுக்கிரகஞ் செய்யுங் கடவுளை மன மொழி மெய்களாேத்துவர மிகவும் வணங்குவது நம்மனோர்க்கு அத்தியாவசியகமான கடமையாம். இஃதில்லாவிட்டால், நாம் நற்கதி பெறுவது ஒருவாற்றானு மின்றாம். இதுபற்றித்தான் உலகநீதி "கோயிலில்லா வூரில்குடி யிருக்க வேண்டாம்" என்று கூறுகின்றது.

எங்கும் எள்ளிலெண்ணெய் போல வியாபகமாயிருக்குங் கடவுளை யோரிடத்திருப்பதாகப் பாவித்து வணங்குவது தவறாகாதோ வெனின், இது தியான விலக்கண மறியாதவரது கூற்றாம். கடவுளை இருதயம், கண்டம், புருவமத்திய மென்னு மிடங்களுள் யாதாவ

தோரிடத் திருப்பதாகப்பாவித்தா லன்றி வேறு வகையாகத் தியானிப்பது கூடாமையின், தியானத்தின் பொருட்டுக் கடவுளுக் கோரிடத்தைக்கற்பிப்பது ஒருவாற்றானுங் குற்றமுடைய தன்றாம். சுருக்கமுடையது பெருக்கமா யிருத்தற்குரியதாகாது; பெருக்கமுடையது சுருக்கமாகத் தோன்றுதற் குரியதாமென்பது விளங்கினால், ஆலயத்தில் கடவுளிருப்பதாகப் பாவித்து வணங்குதல் தவறுடையதாகா தென்பது விளங்கும். பெருக்க (வியாபக)மாயுள்ள ஆகாயம் ஊசியின் காதில் சுருக்கமாகத் தோன்றுவதுபோல, பெருக்கமாயுள்ள கடவுளும் ஆலயத்தில் சுருக்கமாக விளங்குகின்றார். மோகத்தின் வசப்பட்டுச் சுருங்கிய வடிவினராக விளங்கும் நாம் வியாபகமாயுள்ளகடவுளை வியாபகமாகத் தியானிப்பது கூடுமோ? கூடாமையின், அவரைச் சுருங்கிய வடிவினராகப் பாவித்தாற்றான் தியானித்தல் கூடும்.

நினைப்பது என்றவிடத்து, யார், எதனால், எங்கே, எப்போது, எதனை யென்னும் வினாக்கள் நிகழுமன்றோ? கடவுளை வணங்குதலென்னுமிடத்தும் இவ்வைந்தும் வேண்டுவனவாம். இவ்வைந்திற்கும் விடை முறையே நாம், மனதால், ஆலயத்தில், குறித்தகாலத்தில், கடவுளை யென்று பெறப்படுவதாம். இவ்வாற்றால் கடவுள் காலதேசங்கட்குக் கட்டுப்பட்டிருக்கின்றாரென்று பாவித்தாலன்றி, அவரை வணங்குதல் முடியாதென்பது செவ்விதின் விளங்குவதாம்.

வீட்டிலிருக்கும் போது நமக்குக் கடவுளைப்பற்றிய ஞாபகம் பெரும் பான்மையு முண்டாவதில்லையாம்; ஆலயத்திற்குப் போயவிடத்தோ அவரைப் பற்றிய

ஞாபகம் தொடர்ச்சியாக வுண்டாகின்றது; அது தொடர்ச்சியாக வுண்டாவதால், நாம் பழிபாவங்கட்கஞ்சி யொழுகுதல்வேண்டும், கடவுளது கருணைக்குப் பாத்திரராதல் வேண்டும் என்று கருதி, அவரை யன்போடு வணங்க முயலுகின்றோம்.

புத்தகமானது தன்னிடத்துள்ள அர்த்தங்களைத் தன்னைப் படிப்பவர்க்கு அவரவருடைய அறிவின் தன்மைக்கேற்ப வுணர்த்துவதுபோல, ஆலயமும்தன்னிடத்தெழுந்தருளி யிருக்கும் கடவுளின் ஞாபகத்தைத் தன்னை வணங்குகின்றவர்க்கு அவரவருடைய அறிவின் தன்மைக் கேற்ப வுணர்த்துகின்றது. இதனாற்றான், ஆலயத்திற்குப் போவார்யாவரும் ஒரு திறத்தினராகாதிருக்கின்றனர். ஆலயத்திற்குக் கடவுளைவணங்கச்செல்லுவோர் பல திறத்தினராக விருப்பினும், அவரது நோக்கம் கடவுளை வணங்கி நற்கதி பெறவேண்டுமென்பதாக விருத்தலின், ஆலயத்திற்குச் செல்வது எவ்வகையானும் பழுதுடையதன்றாம். இஃது ஆலயத்தைக் கண்டவுடனே நமக்குத் தெய்வ சிந்தனை யுண்டாவதைக் கவனிப்போமாயின், நன்கு விளங்கும்.

எவ்வாற்றானும், ஆலயத்திற்குச் சென்று கடவுளை வணங்குவது மிகவும் நன்மையைத் தருவதாக விருத்தலின், இதனை மறவாது மேற்கொண் டொழுகுகின்றவர் தவறாது நன்னிலையினை யடைவாரென்பது பிறழாத சித்தாந்தமாம்.

> " முன்னவ னார்கோயில் பூசைகள் முட்டிடின்
> மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும்
> கன்னங் களவு மிகுத்திடுங் காசினிக்
> கென்னரு ணந்தி யெடுத்துரைத் தானே"

என்று திருமந்திரங் கூறுவது இங்கு நன்குணர்தற் பாலதாம்.



# 3. இல்லற மல்லது நல்லற மன்று.

---

இந்திரன் முதலிய இறையவர் பதங்களும் அந்த மில் இன்பத்தழிவில் வீடும் நெறியறிந்து எய்துதற் குரிய மாந்தர்க்கு உறுதியென உயர்ந்தோரா லெடுக்கப் பட்ட அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு பொருள்களுள், அறமாவது மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலுமாம். இஃது இம்மையின்பம், மறுமையின்பம், மோட்சமென்னு மூன்றனையும் தருவதாம்; பொருளோ இம்மையின்பம் மறுமையின்பமென்னு மிரண்டனையும் தருவதாம். அறம் பொருளென்னு மிரண்டனுள் அறம் பொருளி னும் மேம்பட்டதாக விருத்தலின், அறத்தைச் செய்ப வர் பொருளின் பயனாகிய இம்மையின்பம் மறுமையின்ப மென்பனவேயன்றி மோட்சத்தையும்பெறுதற்குரியவ ராவரென்பது திண்ணமாம். இன்பம் அறத்தாலும் பொ ருளாலுமுண்டாவதாம்; மோட்சமோ பொருளாலன்றி அறத்தாலேயே யுண்டாவதாம். ஆகவே, இன்பமும் வீடும் பயனாவதன்றிச் சாதனமாவதில்லையாம்; ஆயினும், இன்பம் (அறமும் பொருளும்போல) இனிவரு மின் பத்தை யனுபவித்தற்கு ஸ்மிருதி (நினைப்பு) வாயிலாகச் சாதனமாம்.

அவ்வறம் இல்லறம் துறவறமென இருவகைத்தாம். இல்லறமாவது இல்வாழ்க்கை நிலைக்குச் சொல்லுகின்ற நெறிக்கணின்று அதற்குத்துணையாகிய கற்புடைய மனைவியோடுஞ்செய்யப்படும் அறமாம். இல்வாழ்க்கையா வது இல்லா (மனையா) ளோடு கூடிவாழ்தலினது சிறப் பாம். துறவறமோ இல்லறத்தில் வழுவாதொழுகி அறி

வுடையவராய்ப் பிறப்பினையஞ்சி வீடுபேற்றின் பொருட்டுத்துறந்தார்க்குரியதாய அறமாம். இதனால் இல்லறத்தில் வழுவாது ஒழுகியவர்க்குத்துறவறத்தில் வழுவாதொழுகுதல் வாய்ப்பதாமென்பது நன்கு விளங்குவதாம். முன்னர் அன்னையையறிந்து, பின்னர் அன்னைவாயிலாகப்பிதாவையுணர்ந்து, அப்பால் பிதாவினுத்தரவின்படி ஆலயந்தொழுது வருகின்றவர் இல்லறத்தை மேற்கொண்டொழுகவேண்டுமே யன்றித் துறவறத்தை மேற்கொண்டொழுகுதல் கூடாது; அவர் இல்லறத்தை மேற்கொள்ளாது துறவறத்தை மேற்கொண்டொழுக முற்படுவாராயின், அது முற்றுப் பெறுவதரிதாம்; ஆதலின், அவர்க்கு "இல்லற மல்லது நல்லற மன்று" என்று ஒளவைப்பிராட்டியார் அருளிச்செய்தனர். ‡'இல்லற மல்லது நல்லற மன்று' என்பதன் பொருள்வருமாறு.—இல்லறமல்லது—(பிதாவின் உத்தரவின்படி கல்விகேள்வியறிவுடையவரா யொழுகுகின்றவர்க்கு முன்னர்) இல்லறத்தில் ஒழுகுவதல்லது, (மற்றது), நல்லறமன்று—சிறந்த அறமாகாது என்பதாம். மற்றது என்றது துறவறத்தை. இல்லறத்தில் வழுவா தொழுகி யறிவுடையவ ராகாதவர்க்குத் துறவறத்தில் வழுவா தொழுகுதல் சித்திப்பது மிகவு மரிதாம். தொடர்புபற்றுது இயல்பாக எல்லா

‡ இதனை இல்லறம் நல்லறம் அல்லது அன்று என்றன்வயஞ் செய்து, இல்லறம் - இல்லறத்தில் ஒழுகுவது, நல்லறம்-சிறந்த அறமாம், அல்லது - துறவறத்தி லொழுகுவது, அன்று - சிறந்த அறமாகாதுஎன்றுபொருள் கூறினும் பொருந்தும். இல்லற மல்லது - ஒருபற்று மில்லாமையாகிய துறவறத்திலொழுகுவதல்லது, மற்றது - இல்லறத்தி லொழுகுவது, நல்லறமன்று-சிறந்த அறமாகாது என்று பொருள் கூறுவாருமுளர். மற்றது என்பது சொல்லெச்சமாம்.

வுயிர்கள் மேலுஞ் செல்வதாகிய கருணை, மெய், வாய் கண், மூக்கு, செவியென்னு மிந்திரியங்களையும் மனத்தையும் அடக்குவதாகிய தவம், மெய்ம்மையேகூறல், எவரிடத்தும் கோபமில்லாதிருத்தல், பிராணிகளுக்குத் தீமைசெய்யாமை, ஒருயிரையுங் கொல்லாமை முதலியன இல்லறத்தில் வழுவா தொழுகித் துறவறத்தை மேற்கொண்டவர்க்கல்லது மற்றவர்க்குச் சித்திப்பது ஒருவாற்றானு மில்லையாம். வாமதேவர் சுகர் முதலாயினோர் இல்லறத்தை மேற்கொள்வ தொழிந்து துறவறத்தை மேற்கொண்டொழுகித் தத்துவ ஞானிகளாக விளங்கினரென்று நூல்கள் கூறுவதனால், இல்லறத்தை மேற்கொள்ளுவ தொழிந்து, துறவறத்தை மேற்கொண்டொழுகித் தத்துவஞானத்தைப் பெறலாகாதோ எனின், கூறுதும்:—அவர்கள் கீழ்ப்போன பிறப்புக்களில் செய்யவேண்டியவற்றை யெல்லாஞ் செய்துமுடித்து, ஏதோ ஒரு கர்ம விசேஷத்தால் பிறந்தவர்களாதலின், அவர்கள் இல்லறத்தை மேற்கொள்ளுவதொழிந்து, துறவறத்தை மேற்கொண்டொழுகி முத்தரானார்கள். நாம் அத்தன்மைய ரல்லேமாகலின், நமக்குரியதுமுன்னர் இல்லறத்தை மேற்கொண்டொழுகுதலேயாம். இவ்வாறுள்ள நம்மனோரை நோக்கித்தான் ஔவைப் பிராட்டியார் ‘இல்லற மல்லது நல்லற மன்று’, என்றருளிச் செய்தனர்.

இல்லறத்தை மேற்கொண் டொழுகுவ தொழிந்து, தத்துவ ஞானத்தைப் பெறவேண்டுமென்னும் விரைந்த நோக்கமுமின்றித் துறவறத்தை மேற்கொண்டவர்கூடா வொழுக்க முடையவராக விருத்தலையின்றுங்காணலாம்; இனியுங்காணலாம். ஆதலால், நாம் இல்லறத்தில் வழுவா தொழுகினல், பெறவேண்டியவற்றையெல்லாம் தவறாது பெறுதற்குரியவராவோம்.

இல்லறத்தி லொழுகுவார் முக்கியமாக மேற்கொள்ளுதற் குரியன : மனைவி மைந்தர் முதலாயினாரிடத்து அன்பாயிருத்தல், விருந்தினர்க் குபசாரஞ்செய்தல், யாவரிடத்து மின்சொற் கூறல், பிறர்செய்த வுபகாரத்தை மறவாமை, பகைவர், சிநேகிதர், அயலாரென்னு முத்திறத்தாரிடத்தும் நடுவுநிலைமையோ டொழுகுதல், மனம் வாக்குக்காயமென்னு திரிகரணங்களையுந் தீய வழியிற் செல்லாவாறடக்குதல், தத்தம் † வருணத்திற்கும் நிலைக்கும் ஓதப்பட்ட ஒழுக்க முடையவராயிருத்தல், பிறர்மனைவியரை விரும்பாமை, பிறர் செய்த தீங்கைக் கூடுமான வளவும் பொறுத்திருத்தல், பிறரது செல்வத்தைக்கண்டு பொறாமை கொள்ளாதிருத்தல், பிறரது பொருளை யபகரிக்க விரும்பாமை, காணுதவிடத்துப் பிறரை நிந்தித்துக் கூறாமை, பயனில சொல்லாமை, தீய செயல்களைச் செய்தற் கஞ்சுதல், உலகத்தோடொத்து நடத்தல், வறியாரா யேற்றூர்க்கு இல்லையென்னுது அவர் வேண்டியவற்றைக் கொடுத்தல் முதலியனவாம். இவையெல்லா முடையவராக ஒழுகுகின்றவர்தாம் வாஸ்தவமாக இல்லறத்திலிருந் தொழுகுகின்றூ ராவர். இவர்க்குஇம்மைப்பயன்புகழாம்,மறுமைப்பயன்சுவர்க்கமாம்.

இல்லறத்தில் வழுவா தொழுகுகின்றவர்க்கு மறுமைப்பயன் சுவர்க்கமா மென்பது:—

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும், தெய்வத்துள் வைக்கப் படும்."

என்று திருக்குறள் கூறுவதாலும்,

" இம்மையில் சுகத்தையும் மறுமையில் சாசுவதமாய புண்ணியலோகத்தையும் எவன் விரும்புகின்றூனே

† வருணம்-ஜாதி ; நிலை-ஆசிரமம்.

அவன் அந்தக் கிருகஸ்தாசிரமத்தை முயற்சியோடு காப்பாற்றல் வேண்டும்; அஃது இந்திரிய அடக்கமில் லாதவரால் காப்பாற்றப்படுவதாகாது" என்று மனுதர்ம சாஸ்திரம் கூறுவதாலும் நன்குவிளங்கும்.

தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் துறவறத்தை மேற்கொள்ளாமல் இல்லறத்திலிருந் தொழுகினு ரன்றோ? இல்லறத்தார்க்குச் சுவர்க்கப் பேறன்றி மோட்ச மின்றுமாகலின், அவர்க்கு மோட்சமின்றோ' வெனின், கூறுதும்:—துறவு - அகத்துறவு புறத்துறவு எனவிருவகைத்தாம். திருவள்ளுவநாயனார் இல்லறத்தி லிருந்தே அகத்துறவுபூண்டொழுகினாராதலின், அவர்க்கு மோட்சமின்றென்பது பொருந்துவதன்றும். திருவள் ளுவநாயனார் அகத்துறவே மோட்சத்திற்குக் காரண மாவதன்றிக் கேவலம் புறத்துறவு காரணமாவதில்லை யென்பதை விளக்கத் தாம் இல்லறத்திலிருந்தே அதனை யொழுகிக் காட்டினர். இதனாலும் துறவே மோட்சத் திற்குக் காரணமாமென்பது இனிது விளங்கும். "இல் லற மல்லது நல்லற மன்று" என்று திருவாய்மலர்ந் தரு ளிய ஔவைப் பிராட்டியார் தம் வாழ்நாள் முழுதும் துறவற வொழுக்கத்தினரா யிருந்தாரென்பதும் இங் குக் கவனித்தற் பாலதாம்

தொல்காப்பியம் கற்பியல் "காமஞ் சான்ற கடைக் கோட் காலே, யேமஞ் சான்ற மக்களொடு துவன்றி,யறம் புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியும், சிறந்தது பயிற்ற லிறந்ததன் பயனே" என்னுஞ் சூத்திரத்தி னுரையில் நச்சினார்க்கினியார் " இது முன்னர் இல்லற நிகழ்த்திய தலைவனும் தலைவியும் பின்னர்த் துறவற நிகழ்த்தி வீடு பெறுப என்கின்றது" என்றும், 'ஏமஞ்சான்ற' ஆவன

வானப்பிரத்தமும் சன்னியாசமும்; எனவே, இல்லறத்தின் பின்னர் இவற்றின்கண்ணே நின்று பின்னர் மெய் யுணர்ந்து வீடுபெறுப என்றார்; 'இவ்வீடு பேற்றினை யின்றியமையாதது இவ்வில்லறமென்பது இதன் பயன்' என்றும் கூறியிருத்தலைக் கவனிப்போமாயின், இல்லறத்தின் முக்கியப்பயன் துறவற வாயிலாக மோட்சமா மென்பது செவ்விதாக விளங்குவதாம்.

இத்தகைய இல்லறத்தை நல்லறமன்றென்று தமக் கென வொன்றின்றி யிகழ்பவர் ஒரு வாற்றானு மில்வ இல்லையாம். திருவள்ளுவர் முதலாயினார்போன் றொழுகுகின்றவர்க்கு இல்லறமே பெரிதாம்; பட்டினத்தடிகள், பத்திரகிரியார் முதலாயினார்போன் றொழுகுகின்றவர்க்குத் துறவறமே பெரிதாமென்பது அவர்களின் சரித்திரத்தை வாசித்துணருவோமாயின், நன்கு விளங்கும். இதனால் அகத்துறவு பூண்டொழுகுதல் அதனோடு புறத்துறவும் பூண்டொழுகுதல் என்னு மிவ்விரண்டற்கும் இல்லறத்தில் வழுவாதொழுகுதல் சிறந்த காரணமா மென்பது மாறுபடாது விளங்குவதாம். பிரமசாரி, வானப்பிரஸ்தன், சந்நியாசி, ஆதரவில்லார், வறுமை யுடையார், திக்கில்லாதிறந்தார், பிதிரர், கடவுள், விருந்தினர், சுற்றத்தாரென்னு மிவர்களுக்குத் தான் அறநெறியிற் சென்று தேடிய பொருளைப் பகுத்துக்கொடுத்து வாழுகின்றவனது வாழ்க்கையே பயன்பட்ட வாழ்க்கையாம். இவ்வாழ்கையே துறவற வாயிலாக மோட்சம் பெறுதற் குரிய வாழ்க்கையாம். இது பற்றித்தான் தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார். "அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை" என்றருளிச் செய்தனர்.

" தந்தைதாய் சற்குருவை யிட்டதெய் வங்களைச்
சன்மார்க்க முளமனைவியைத்

தவறாத சுற்றத்தை யேவாத மக்களைத்
தனைநம்பி வருவோர்களைச்
சிந்தைமகிழ் வெய்தவே பணிவிடைசெய் வோர்
தென்புலத் தோர்வறிஞரைத் [களைத்
தீதிலா வதிதியைப் பரிவுடைய துணைவரைத்
தேனுவைப் பூசுரர்தமைச்
சந்ததஞ் செய்கடனை யென்றுமிவை பிழையாது
தான்புரிந் திடலில்லறம்" என்று அறப்பளீசுர சதகம் கூறுவது இங்குணர்தற் பாலதாம்.



## 4. ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்.

"அன்னையும் பிதாவு முன்னறி தெய்வம்" எனவுணர்ந்து, "ஆலயந் தொழுவது சாலவு நன்று" எனத் துணிந்து, இல்லறமே நமக்கு நல்லறமா மென்று நிச்சயித்து, இல்வாழ்க்கை நிலைக்குச் சொல்லுகின்ற நெறிக்கணின்று, அதற்குத் துணையாகிய கற்புடைய மனைவியோடு கூடிவாழ்பவர் மேற்கொண்டொழுகுதற் குரிய முக்கியச்செயல் தாம் சம்பாதித்த பொருளைத் தாமுமனுபவித்து, பிறர்க்கு முதவி செய்தலாம் இவ்வாறு செய்யாவிடின், அவரது வாழ்க்கை பயனுடைய வாழ்க்கையாவதன்றாம்.

"ஈதலறம்" என்று நமது ஞானத் தாயாகிய ஔவைப்பிராட்டியார் கூறுதலால், பல வேறு திறத்தனவாகிய அறங்களுள் ஈதலே சிறந்த அறமா மென்பது இனிது விளங்கும். இவ்வறமொன் றில்லையாயின், வேறெவ்வறமும் பயன்படுவதில்லையாம். இல்லறத்தார்க்குச் சிறந்ததாகிய அன்புடைமையும், துறவறத்தார்க்குச் சிற

ந்ததாகிய அருளுடைமையும், யாதிருந்தால் நடைபெறு வனவாமென்று யூகித்து நோக்குவோமாயின், அஃது ஈதலேயாமென நன்கு விளங்கும். அன்புடைமையாவது இல்லறத்தான் (சம்சாரி) மக்கள், மனைவி, உடன்பிறந்தார் முதலாயினு ரிடத்து அன்புடையவனு யிருத்தலாம்; அருளுடைமையாவது துறவறத்தான் (துறவி) சம்பந்தம் வையாது இயல்பாகவே எல்லா வுயிர்களிடத்துங் கருணை யுடையவனு யிருத்தலாம். இவ்விரண்டும் ஈத லென்னும் அறமில்லாத விடத்து நடை பெருதனவா யிருத்தலின், இல்லறத்தார் துறவறத்தா ரென்னு மிருதி றத்தார்க்கும் இவ்வறம் அத்தியா வசியகமாக வேண்டு வதாம்.

இல்லறம் பொருளளவிற்கேற்பவும், துறவறம் யாக் கை (உடம்பின்) நிலைக்கேற்பவும் நடை பெறுவனவாக விருத்தலின், பெரும்பான்மையும் ஈதலென்னும் அறம் இல்லறத்தார்க்கே யுரியதாம். பொருளில்லாதவர் ஈத லென்னு மறத்தைச் செய்வ தெவ்வாறும்? துறவறத்தா ரிடத்துப் பொருளிருப்பது கூடாமையின், அவர் தம்மி டத்து வந்து யாசிப்பவர்க்கு எதனைக் கொடுத்தல் கூடும்? துறவறத்தார் தம்மை யடுத்தவர்க்குச் சன்மார் க்கத்தி லொழுகு மாறு போதித்தல் முதலிய வற்றைச் செய்வதே ஈதலாம். இல்லறத்தார் துறவறத்தார்க்கும் மற்றையோர்க்கும் பசிப்பிணி முதலியன வொழிய உபகாரஞ் செய்தலின், அவர் இவ்விஷயத்தில் துறவறத் தாரினும் சிறந்தவ ராவர்.

மனத்தால் பிறர்க் குதவி செய்யுமாறு நினைத்த லும், வாக்கால் ஒருவர்க்குதவி செய்யுமாறு மற்றொரு வர்க்குக் கூறுதலும் ஒருவகையாய ஈதலாம். பசி முத லியவற்றால் வருத்த முற்றிருப்பவர்க்குப் பொருள் வாயி

லாக வுதவி செய்ய வியலா விடத்து, அவர்க்குப்பிறர் வாயிலாகவேனும் உதவி செய்ய முயலுதல்வேண்டும். இவ்வாறுகவேனுஞ் செய்யாதிருப்பவர் யாவராவர்? அவர் பாவியரே யாவர். ஏழைகளாய் வந்து யாசிப்பவர்க்கு அவர் விரும்பியவற்றைக்கொடுப்பவர் அவற்றைப் பிறரறியக்கொடுப்பது இடம்பமாகமுடியும். ஒரு பெரியவர் "வலக்கை கொடுப்பது இடக்கைக்குத்தெரியா திருத்தல் வேண்டும்"என்று கூறுகின்றார். இதனால் பிறரறிந்து புகழுமாறு ஏழைகளுக்குக் கொடுப்பது பெரும்பயனுண்டாக்காதென்பது நன்கு விளங்கும். ஏழைகளுக்கு அவர் வேண்டியவற்றைக் கொடுக்கும்போது மலர்ந்த முகமும் இனிய சொல்லுமா யிருத்தல் வேண்டும்; அவ்வாறின்றிச் சுருங்கிய முகமும் கடுகடுத்த சொல்லுமா யிருந்து ஈதலாகிய அறத்தைச் செய்பவர் அதன் பயனை யடைவதில்லையாம் சாம்பலில் வார்த்த நெய் யாதொருபயனுமில்லாதொழிவதுபோல,அவர் செய்யும் அறமும் யாதொரு பயனு மில்லா தொழிவதாம்.

பொருளைத் தேடும்போது நாம் வெகுகால மிருப்போமென்னுந் துணிவுடையவரா யிருத்தல் வேண்டும்; வெகுகால மிருப்போ மென்னுந் துணி வில்லா விடத்துப் பொருளைத் தேடு முயற்சி குறைந்து போவதாம். ஆதரவற்றவர், தரித்திரர் முதலியவர்க்கு அவர் வேண்டிய தொன்றைக் கொடுக்கு மிடத்தோ நாம் அடுத்த கணத்தில் கூட விருப்பது நிச்சயமன்றென நிச்சயித்தல்வேண்டும். நாம் அடுத்த கணத்தில் கூட இருப்பது நிச்சயமன்றென் றெண்ணுவிடத்து அறத்தைச்செய்வது குறைந்து போவதாம்.

மேகம் மழை பெய்வது போலப் பயனைக் கருதாது ஏழைகளுக்குப் பொருளைக் கொடுத்தல் வேண்டும்;

இவ்வாறு கொடுக்குமிடத்துத்தான் அது சிறந்து விளங்குகின்றது. ஏழைகளுக்கீதற் பொருட்டே பொருளைத் தேடுகின்றோமென் றெண்ணுகின்றவர்தாம் ஈதலென்னும் அறத்தைச்செய்தற் குரியவராக விருக்கின்றனர்; அவ்வா றெண்ணாதவரோ உலோபிகளாக விருக்கின்றனர். ஊர் நடுவே பழுத்த மாமரம் போல ஈகையாள னிருக்கின்றான். அவனிடத்துள்ள பொருளைப் பெறுவது ஏழைகளுக்கு மிகவெளிதாயிருக்கின்றது. ஏழைகள் முகம் பார்த்திரங்கி, அவர்க்கு அவர் வேண்டிய வற்றைக் கொடுப்பவன் அதனால் தான் வறியவனாவது பற்றி வருந்துவதே யில்லையாம். "இறைக்கிற கிணறு சுரக்கும்" என்பது ஒரு பழமொழியல்லவோ? பழமொழி வீணே வழங்கப்பட்டு வருமோ? வராதன்றோ? எவன் ஏழைகளுக் கில்லை யென்னாது, அவர்க்கு அவர் வேண்டியவற்றைக் கொடுத்து வருகின்றானோ அவன் அதனால் ஒரு காலத்தில் ஏழையாய் விட்டானாயினும், உண்மையி லேழையாவதே யில்லையாம்.

"வறியார்க்கொன் றீவதே யீகை:—ஒரு பொருளுமில்லாதார்க்கு அவர் வேண்டிய தொன்றைக் கொடுப்பதே பிறர்க்குக் கொடுத்தலாவது" என்று திருக்குறள் கூறுவதைக் கவனித்துப் பார்க்குமிடத்து, ஏழைகளுக்கன்றி மற்றவர்க்குக் கொடுப்பது ஈகை (ஈதல் - கொடுத்தல்) ஆகாதென்பது விளங்கலால், ஏழைகளுக்கே தகுதியறிந்து உதவி செய்தல் வேண்டும். ஈதலுடையவர்தாம் புகழ்பெறுதற் குரியவராவர்.

புகழ், கல்வி ஆண்மை முதலியவற்றா லுண்டாவதாம்; ஆயினும், அஃது ஈதலாலுண்டாகும் புகழினும் சிறந்ததன்றாம். ஈதல் பல திறத்தனவாம். அவற்றுள்,

பசித்தோர்க்கு உணவினைத் தருதல் சிறந்ததாம்; ஏனைய வெல்லாம் அதற்குப் பிற்பட்டனவாம். ஏழைகளுக் கில்லை யென்னாது, அவர்க்கு யாதாவதொன்றனைக் கொடுப்பதாகிய ஈதல் † மதிப்பிற்கும் ‡ புகழிற்கும்காரணமாயிருத்தலை யொருசிறிது மறியாது, தாம் தேடிய பொருளைத்தாமுமனுபவியாதும்வறியார்க்கு மீயாதுமிருப்பவர் தேனீக்கள் பல பூக்களிலுஞ் சென்றுகொண்டுவந்து சேர்த்துவைத்திருக்கின்ற தேனைக் குறவர் முதலியோர் அபகரித்துக் கொண்டுபோதலை யறிந்திலர் போலும்! யார் வீட்டிற்குக் கள்வர் கொள்ளையிடச் செல்லுகின்றனர்? ஏழைகளுக் கொன்றுங் கொடாதுள்ள வுன்மணத்தினர் வீட்டிற்கேசெல்லுகின்றனர். கள்வர் அவரது வீட்டில் கொள்ளையிடும் போது, அவர்க்கடியுதை முதலியவற்றைப் பரிசாகக் கொடுத்தே அங்குள்ள பொருளை யெடுத்துச் செல்லுகின்றனர். இவரது இல்லறவாழ்க்கை சுடுகாட்டு வாழ்க்கைபோல்வதாம். இவ்வுலோபிகள் இவர் பெற்றார், இவர் உடன்பிறந்தார், இவர் சிநேகிதர், இவர் உறவினரென்று கருதாதிருக்கின்றனர். இவர்க்குத் தெய்வம் பணமேயாம்; இவர்க் கதனால்வரும் பயன் கள்வர் முதலியோர் கொடுக்கும் அடியுதை முதலியனவே யாம். இது,

“ பெற்றார் பிறந்தார் பெருநாட்டார் பேருலகில்
உற்றா ருகந்தா ரெனவேண்டார்—மற்றோர்
இரணங் கொடுத்தா லிடுவ ரிடாரே
சரணங் கொத்தாலுந் தாம். ”

என்று நல்வழி கூறுவதா லினிதுவிளங்கும். (இரணம்-காயம்; சரணம் - அடைக்கலம்).

---

† மதிப்பு—ஒளி; அஃதாவது ஒருவன் தானுளனாய காலத்து மேம்பட்டு விளங்குதல்.

‡ புகழ்—உலக முள்ளளவளவும் இறவாது நிற்குங் கீர்த்தி.

"ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்:—தாமுமனு பவியாது வறியவர் முதலியவர்க்கு முதவி செய்யாதவர் சம்பாதித்த பொருளைக் கள்வர்முதலியோ ரபகரித்துக் கொள்வார்" என்றறிந்து, ஈதலாகிய அறத்தை மேற் கொண் டொழுகுகின்றவர் யாம் ஈதலென்னும் அறத் தால் மேம்பட்டிருக்கின்றோ மென்று கர்வமடையாதும், அவ்வறத்தின்கண் அசிரத்தை வையாதும், யாசிப்பவ ரது கருத்திற்கு மாறாய்க் கொடாதும், பொருள் செல வழிந்து போகின்றதே யென்று கலக்கமுறா திருத் தல்வேண்டும்.

கொடை ஐவகை யேதுக்களால் நிகழுகின்றது. அவ்வேதுக்கள் புகழ், பயன், அச்சம், அன்பு, அருள் எனபனவாம.

1. நம்முடைய பெயர் எங்கும் வியாபிக்கவேண்டு மென்று கருதிப் பலர்க்கும் பொருளைக் கொடு ப்பது புகழ் பற்றிய கொடையாம்.

2. பின்வரும்பயனை யுத்தேசித்துப் பிறர்க்குப்பொரு ளைக்கொடுப்பது பயன் பற்றிய கொடையாம்.

3. கள்வர், கொடுங்கோலரசர் முதலியவர்க்குப் பொ ருளைக்கொடுப்பது அச்சம்பற்றிய கொடையாம்.

4. நண்பர்கட்குப் பொருளைக் கொடுப்பது அன்பு பற் றிய கொடையாம்.

5. ஏழைகட்குப் பொருளைக் கொடுப்பது அருள்பற் றியகொடையாம்.

இவற்றுள், அருள்பற்றிய கொடையே ஈதலென்று சொல்லப்படுகின்றது.

இவ்வருள் பற்றிய கொடையை யுடையவர்தாம் தம்முயிரும், உடம்பும், உறுப்பும் முதலாகிய எல்லாவற்றையும் வறியார்க்குக் கொடுக்கின்றவராயிருக்கின்றனர்.

சிபிச் சக்ரவர்த்தி, ததீசி மகாரிஷி, கர்ணன் முதலியவர்களின் சரித்திரங்களைப் படித்துப் பார்க்குமிடத்து, அவர்கள் அருள்பற்றிய கொடையால் சிறந்தவர்களென்பது நன்கு விளங்கும்.

புகழையும் பயனையும் நோக்கிக் கொடுக்குங் கொடை பண்டமாற்றுப் போல்வதாம்; கள்வர் முதலியோர்க்குக் கொடுக்குங் கொடை திருஷ்ட(பிரத்தியட்ச)துக்கத்தை நீக்குவதாக விருத்தலின், மருத்துவர்க்குப் பொருள் கொடுப்பது போல்வதாம்; நண்பர்கட்குக் கொடுக்குங் கொடை கடன்கொடுப்பது போல்வதாம்; ஏழைகளுக்குக் கொடுக்குங் கொடை ஒருகாரணமும் நோக்காததாக விருத்தலின், யாதொன்றனையும் போல்வதன்றாம். ஆகவே, அதுவே அறங்களுள் சிறந்த அறமாம்.

இவ்வறத்தைச் செய்வது பற்றி யொரு சிறிது மெண்ணாது தம்வாழ்நாளைக் கழிப்பவர் இம்மையில் (இவ்வுலகில்) தம் பொருளைக் கள்வர் முதலாயினோர்க் கிழப்பதனால் பெருந் துன்ப முறுகின்றனர்; மறுமையிலோ (இறந்த பிறகோ) நரகத்துன்பத்தை யனுபவிக்கின்றனர்.

யார் தரித்திர ரென்று கூறப்படுகின்றன ரென்று சிறிதாலோசித்து நோக்குவோமாயின், அவர் கிடைத்தது கொண்டு திருப்தி யடையாதவரே யென்பது நன்கு விளங்கும். "செல்வ மென்பது சிந்தையி னிறைவே" என்று பெரியார் கூறுவதைச் சிறிதூன்றி நோக்

னுல், கிடைத்தது கொண்டு திருப்தி யுறுதவர் தரித்திரரென்பதும் திருப்தியுற்றிருப்பவர்செல்வரென்பதும் விளங்காநிரா. பொருளிருந்தும், அதனுல் திருப்தி யுறு திருப்பவர்க்குக் கொடுக்கும் கொடை சிறப்புடையதன்றும். உண்மையில் பொருளின்றி வருந்துவோர்க்கு எவ்வகையாலும் உதவி செய்து அவரை முன்னுக்குக் கொண்டு வருவதே சிறந்த அறமாம். கொடையில் முதலாவதாகச் சிறந்திருப்பது பசித்தவர்க்கு அன்ன மிட்டு அவரைப் பாதுகாப்பதாம்; இரண்டாவதாகச் சிறந்திருப்பது அவர்க்கேனும் அவர்தம் பிள்ளைகளுக்கேனும் கல்வி யுண்டாமாறு செய்வதாம். இவ் விரு வகை யறங்களையும் ஒவ்வொருவரும் செய்து வருவாராயின், காலக்கிரமத்தில் நாடெங்கும் நல்ல வாழ்வுண்டாவதாம்.

ஈயாமை யென்னும் பாவச்செயலாற்றுன் நரக முண்டாகின்றது. கிடைத்ததுகொண்டு திருப்தி யடையாதிருப்பவர் தம்மைத் தரித்திரராகவெண்ணி யிருத்தலால், மேலும் மேலும் பொருளை விரும்பிப் பாவ காரியங்களைச் செய்யுமாறு முற்படுகின்றனர்; அதனுல் அவர் இறந்த பிறகும் துன்ப மடைதற்குரியவ ராகின்றனர். (நரகம் பாவத்தாலும்) பாவம் மிடி (வறுமை) யாலும், மிடி ஈயாமையாலு முண்டாகின்றன வென்றெண்ணி யொழுகுதல் எவரிடத்திருக்கின்றதோ அவர்தாம் ஈதலைச் செய்து இசை (புகழ்) பட வாழ்வர்.

"படர்நரகம் பாவத்தால் பாவ மிடியால், மிடியீவிலாமையினு மே" என்று பெரியார் கூறுவதை யடிக்கடியெண்ணி, தமக்கு வரும் பொருளில் நான்கிலொரு பாகத்தைக் கூடுமான வளவும் ஏழைகளுக் கன்ன மிடுதல், ஆதரவற்றவர் மக்களுக்குக் கல்வி கற்பித்தல் முத

லிய வற்றில் செலவழித்து வருவது ஒவ்வொருவர்க்கும் அத்தியாவசியகமான கடமையாம்.

ஈயாமை, அதன் காரணம், ஈயாமையால் வரும் துன்பம், அவற்றை யொழித்தலால் வரும் பயன் என்பன வற்றை நன்காராய்தல் வேண்டும். ஈயாமை யென்பது உலோப குணமாம்; அதன் காரணம் நாம் என்று மிருப்போமென்னு மெண்ணமாம்; ஈயாமையால் வரும் துன்பம் கள்வர் முதலாயினோர் வாயிலாக வரும் கடுந் துன்பமாம். அவை, உலக நிலையாமை, மரணம் நினையாத நேரத்தில் வருமென்பவற்றை யுணருவதா லொழிவனவாம்; இவை யொழிந்தால் பிறரால் இவன் படுபாவி யென்று பழிக்கப் படுவதொழிவதோடு புகழ் பொருள் புண்ணிய முதலியனவெல்லா முண்டாவனவாம். இவ்வளவு நன்மைக்குக் காரணமா யுள்ள ஈதலென்னும் அறத்தைச்செய்யாது, பழிக்கும் பாவத்திற்கும்அடிமையாகி, துன்புறுகின்றவர் இருப்பதிலும் இறப்பதே நலமாம். அவர் இருக்குமளவும் பூமிக்குப் பாரமா யிருக்கின்றனர். இவர்தாம் உண்மை நோக்கில் இழிகுலத்தாராக விருக்கின்றனர். இஃது "இட்டார் பெரியோ ரிடாதா ரிழிகுலத்தோர்" என்று பெரியார் கூறுவதனால் நன்கு விளங்குமன்றோ? "இசைமை (புகழ்) என்பது இன்பமும் பொருளும் இறப்பப் பயப்பினும் (மிகுதியாகத் தருவதாயினும்) பழியொடு வருவன செய்யாமை" என்று "கல்வி தறுகண்" என்னும் (தொல்காப்பிய) சூத்திரவுரையில் நச்சினார்க்கினியார் கூறி யிருப்பதை நன்கு சிந்தித்து, 'ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்' என்பதற் கிலக்கியமாவ தொழிந்து வாழ்வதுவே ஒவ்வொருவர்க்கும் பயனுடைய வாழ்க்கையாம்.

திருக்குறள்.

" அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர்."

திரிகடுகம்.

" ஈதற்குச் செய்க பொருளை."

நான்மணிக்கடிகை.

" ஈத்துண்பா னென்பா னிசைநடுவான்."

நன்னெறி.

" பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி யாக்குபவர் பேறும்."

நல்வழி.

" ஏற்றவர்க்கு, நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா
இல்லையென மாட்டா ரிசைந்து." (ராறுலும்

என்றற் றொடக்கத்துப் பிரயோகங்களிங்கு நன்கு கவனித்தற் பாலனவாம்.



## 5. உண்டி சுருங்குதல் பெண்டிர்க் கழகு.

இல்வாழ்க்கை நிலைக்குச்சொல்லுகின்ற நெறிக்க ணின்றொழுக வேண்டுமென்று விரும்புகின்றவன், தன் மனைவி தனக்கொத்த கருத்துடையவளா யொழுகா திருப்பாளாயின், தான் மேற்கொண்ட இல்வாழ்க் கை நிலையினைக் கடைபோகச்செய்து முடிப்பது ஒரு வாற்றானு முடியாததாம். இல்லின்கணிருந்து வாழு கின்றவனது அறம் அவனது மனையாள் நற்குணநற்

செய்கைகளையுடையவளா யிருந்தாற்றான் சிறந்து விளங்குவதாம். கொண்டான் ஒருவழியிற் செல்ல, கொண்டவள் பிறிதொருவழியிற்செல்ல நடைபெறும் இல்வாழ்க்கை ஒருவாற்றானும் சிறப்படைவதில்லையாம். கணவனும் மனைவியும் இல்வாழ்க்கையை நடத்துவதற்கு ஒருவண்டியிற் பூட்டிய இரண்டெருதுகள் போன்றிருக்கின்றனர். ஒருவண்டியிற் பூட்டிய இரண்டெருதுகளுள் ஒன்று மாறுபட்டுச் செல்லுமாயின், அவ்வண்டி குறித்தவிடத்திற்குப்போவது முடியாதன்றோ? அவ்வாறே கணவன் மனைவியென்னு மிருவருள் ஒருவர் மாறுபட்டவிடத்து இல்வாழ்கையானது இனிது நடைபெறுவதில்லையாம். இல்வாழ்க்கை கணவன் மனைவியென்னுமிருவருள் எவர் வாயிலாக இனிது நடைபெறுகின்றதென்று நன்கு சீர்தூக்கிக் கவனிப்போமாயின், அது மனைவிவாயிலாகவே இனிது நடைபெறுவதாமென்பது நன்குவிளங்கும். ஒருவன் நற்குண நற்செய்கைகளுக் குறைவிடமா யிருந்தாலும், அவன் மனைவி அவனுக்கு மாறுபட்டவளாயிருப்பாளாயின், அவனது இல்வாழ்க்கை இடு (சுடு) காட்டு வாழ்க்கை போன்றிடர்ப்பாடுடையதே யாகும். மனைவி நற்குண நற்செய்கைகளுக் குறைவிடமா யிருப்பாளாயின், கணவன் நற்குண நற்செய்கைகளை யுடையவனாயிருத்தல் வேண்டுமென்பதவசியமன்று. பெண்களுக்குத் தம் புருஷரைத் தம்வசமாகச்செய்தல் மிகவெளிதாமாகலின், மனையாள் நற்குண நற்செய்கைகளை யுடையவளாயிருப்பதே இல்வாழ்க்கை யினிது நடைபெறுவதற்குச் சிறந்த காரணமாம்.

மனைவி "கணவனுக் கினியளாய் மிருதுபாஷிணியாய்" இருப்பாளாயின், கணவன் தான் எவ்வளவு குரூ

ரத்தன்மை யுடையவனாயிருப்பினும், அதனை யடக்கிக் கொண்டு, அவள் கூறியவற்றைக் கூறியவாறே செய்யத் தொடங்குகின்றான். ஒரு வண்டியிற் பூட்டிய இரண் டெருதுகளுள் ஒன்று குறித்தவிடத்திற்குப் போவதும் வன்மையுடையதுமா யிருக்குமாயின், மற்றொன்றன் முரட்டுத்தன்மை அதனிடத்துச் செல்லாததாம்; ஆனால் அம்முரட்டெருது நேர்மையுள்ள எருது போம்வழியே போகவேண்டியதாம். இங்ஙனமேமனைவி நேர்மையுடைய வளா யிருப்பாளாயின், நற்குண நற்செய்கை யில்லாத கணவனுடைய பிடிவாதம் பெரும்பான்மையும் முடிவு பெறாததாம். இதனால் இல்வாழ்க்கை, மனைவி நற்குண நற்செய்கையில்லாதவளாயின், இனிது நடைபெறாது; உடையவளாயின், இனிது நடைபெறுமென்பது இனிது விளங்குவதாம்.

"ஐயருக் கமுதுபடை யென்றுவந் தாய்நீயு மாண் பிள்ளை யென்றெண்ணவோ, அரிசியெங் கேபானை சட்டி யெங் கேயென்பள் அவள்சொன்ன வகைகளெல்லாம்; பையவே கொண்டுவந் தாலுஞ் சமைக்கப் படாதுதலை நோகுதென்று, பாயிற் கிடப்பள்சின மாயொன்று பே சினால் பாருனக் கேற்றபுத்தி; செய்யவல் லேனென்பள் சற்றடித் தால்நஞ்சு தின்கிறேன் கூகூவெனத், தெரு வீடு தோறுமுறை யிடுபெண்டி ருண்டெனிற் றீய நமன் வேறுமுண்டோ." என்று திருவேங்கடசதகங் கூறிய வாறு மனைவி யிருப்பாளாயின். கணவனது நற்குண நற் செய்கைகள் என்னபய னுடையனவாம்?

கணவனது தீக்குண தீச்செயல்களை வெளியிடா தடக்கி, இல்வாழ்க்கையை யினிது நடத்துகின்றவள் தான் பெண்டிரென்னுஞ் சொற்கு உண்மையாய பொ ருளாவள்.

* "நல்விருந் தோம்பலின் நட்டாளாம் வைகலும்
இல்புறஞ் செய்தலி னீன்றதாய்-தொல்குடியின்
மக்கட் பெறலின் மனைக்கிழத்தி யிம்மூன்றுங்
கற்புடையாள் பூண்ட கடன்."

என்று திரிகடுகங் கூறுவதால், கற்புடைய மனைவியின் உத்தமச் செய்கை யினிது விளங்கும். மனைவி உண்டி சுருங்குதல் முதலிய உத்தம குணங்களை யில்லாதவளா யிருந்தால், அவள் விருந்தினரை யுண்டி முதலியனதந் துபசரித்தல், இல்வாழ்க்கையை யினிது நடைபெறச் செய்தல், சந்ததி விருத்திக்காகத் தான் பெற்ற மக்களைச் செவ்வையாகக் காப்பாற்றுதல் என்பனவற்றைச் செய்வ தெப்படியாம்? மனைவி தன் கணவனுக்கு வந்த விருந்தினரை நல்வரவுகூறி யழைத்து, உண்டி முதலியனதந் துபசரித்தலால் நட்டாளாக விருக்கின்றாள்; இல்வாழ்க்கையை முட்டில்லாது நடத்துதலால் அன்னையாக விருக்கின்றாள்; சந்ததி விர்த்திக்காக மக்களைப் பெறுதலால் பெண்டிராக விருக்கின்றாள். இவ்வாறிருக்கும் பெண்டிர் உண்டி சுருங்குதல் முதலியவற்றை யுடையவராயிருப்பது ஒரு தலையாம். (ஒருதலை—நிச்சயம்).

குசேல முனிவருடைய பெறலருங் கற்பின் கிழத்தியாகிய சுசீலையின் சரித்திரத்தினைச் சற்று நிதானமாகப் படித்துப் பார்ப்பவர்க்கு "உண்டி சுருங்குதல் பெண்டிர்க் கழகு" என்பது நன்கு விளங்கும்.

உணவினைக் குறைத்துண்ணுதல் மனைவியர்க்குச் சிறந்த இலக்கணமாமென்பது 'உண்டி சுருங்குதல் பெண்டிர்க் கழகு' என்பதன் பொருளாம். உண்டிசுருங்குதல் என்று கூறப்பட்டதாயினும், "ஒருமொழி யொ

ழிதன் வினங்கொளற் குரித்தே" என்னுமுபலக்கணத் தால், ஆடையாபரணங்கள் முதலியவற்றை யளவிற்கு மிஞ்சிக் கேட்டலிற் சுருங்குதல் முதலியவற்றையுங் கொள்ளுதல் வேண்டும்.

சுசீலை உண்டிசுருங்குதல் முதலியவற்றை யுடையவராயிருந்தமையாலன்றோ தமது 27 பிள்ளைகளையுங் காப்பாற்றியதுடன், தமது நாயகராகிய குசேலர்க்கும் மனங்கோணுவாறு நடந்து வந்தனர். அவ்வம்மையார் வயிறுதாரியாயிருந்து, தமது கணவராகிய குசேலரை அதுவேண்டும், இதுவேண்டும் என்று தொந்தரவு செய்து வந்தாராயின், அவரது வாழ்க்கை என் பட்டுவிடும்? கொழுக்கொம்பின்றிய கொடிபோன்றன்றோ அலைந்து விடும்.

மனையாள் மருத்துவ முறைப்படி யுண்டு வருவாளாயின், அவள் தன் கணவனையும் மக்களையும் மருத்துவ முறைப்படி யுணவிட்டுப் பாதுகாத்து வருதற் குரியவளாவள். அவ்வாறொழுகுகின்றவள் தன்னை நோயில்லாது பாதுகாத்துக்கொள்வதுடன், தன் கணவனையும், மக்களையும் நோயில்லாது பாதுகாத்தற்கு முரியவளாகின்றாள். இங்கு உண்டிசுருங்குதல் என்பது உணவினை மிகவுங் குறைத்துண்ணுதலன்றாம்; ஆனால், அரைவயிறு அன்னமுண்டு, கால்வயிறு நீருண்டு, கால் வயிறு காற்றுலாவ விருப்பதாம். இவ்வாறு உண்பதே இங்கு உண்டிசுருங்குதலாம். இது மிதாகாரமெனப் படும். இவ்வாறு உணவினைக் கொள்ளும் பெண்டிருடைய இல்வாழ்க்கை பெரும்பான்மையும் நோயால் வருந்துவதில்லையாம். பெரும்பான்மையும் நோய்வருதற்குக் காரணம் அளவறிந் துணவினை யுண்ணாமையேயாம்.

உண்டிசுருங்குதலில்லாத மனைவி மிதமிஞ்சி யுணவினைக் கடன்வாங்கியேனும் புசித்து, தனது குடும்பத்தைத் தரித்திரமுடையதாகச் செய்பவளாயிருத்தலின், அவள் வாழுமிடம் மூதேவி வாழுமிடமாம்; அவள் கணவனும் மக்களும் நோய்க்கும் தரித்திரத்திற்கும் எந்நாளு முறைவிடமாயிருப்பரென்பதற்கு ஆட்சேபமே யின்றாம். "ஏர்பிடித்தவன் என்னசெய்வான்; பானைபிடித்தவள் பாக்கியம்" என்னும் பழமொழியை நன்கு கவனித்துநோக்குவோமாயின், மனைவியினது நற்குண நற்செய்கைகளே கணவனுடைய மேன்மைக்குக் காரணமாமென்பது விளங்குமன்றோ? கற்புடைய பெண்டிர் உண்டிசுருங்குதலுடையவரா யிருத்தலேயன்றி, தமது நாயகரை நோக்கி, ஆடைவேண்டும், அணிவேண்டும், அயலூர்க்கு வேடிக்கையாகப் போதல்வேண்டுமென்று கேட்டலிலும் சுருங்குதலுடையவரா யிருப்பர்; தமது தாய்வீட்டுக்குப் போகவேண்டுமென்பதிலும் மிகச் சுருங்கிய மனமுடையவரா யிருப்பர்; தமது கணவரையன்றி வேறு தெய்வங்களை வணங்குவதிலும் சுருங்கிய நெஞ்சுடையவரா யிருப்பர்; தமது மங்கல நாண் நீண்டகாலம் இருத்தல்வேண்டுமென்று விரும்புவதன்றி மற்றையவற்றை விரும்புவதிலும் மிகச் சுருங்கிய கருத்துடையவரா யிருப்பர்; அன்னியரை நோக்குவதிலும் மிகச்சுருங்கிய அகமுடையவராயிருப்பர்.

இவ்வாறொழுகும் பத்தினிப் பெண்டிர் தமது நாயகரது வருவாய்க்குத் தக்கவாறு பொருளை யில்வாழ்க்கையில் செலவு செய்து, இல்வாழ்க்கைக்கு வேண்டும் பொருள்களை வாங்கவேண்டியகாலங்களிலே வாங்கி வைத்துக்கொண்டு, தம்வீடு நோக்கி வந்த துறவினர் விருந்தினர் முதலாயினோரைத் தமது கணவரோடிரு

ந்து, உண்டி முதலியன தந்து உபசரித்து வருவர். உண்டி சுருங்குதல் முதலியவற்றையுடைய பெண்டிரைக்கொண்டவர் நற்குண நற்செய்கைகளை யுடையவரா யிருப்பாராயின், அவரது இல்வாழ்க்கை பொன்மலர் நாற்றமுடையது போலப் பொலிவு பெற்று விளங்குவதாம். இதற்கு யாதோர் ஐயப்பாடு மின்றாம்.

"மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை:—

மனையறத்திற்குத்தக்க நற்குண நற்செய்கைகளை யுடையவளாய்த் தன்னைக்கொண்டவனது வருவாய்க்குத்தக்க வாழ்க்கையை யுடையாள் அதற்குத்துணை" என்று திருக்குறள் கூறுவது இங்கு நன்குணர்தற்பாலதாம்.



## 6. ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்.

இல்வாழ்க்கை நிலையிலிருந் தொழுகுகின்றவன் தான் வாழும் ஊராருடன் பகைகொள்ளா திருந்தாற்றான், இடையூறின்றி வாழ்வதற்குரியவனாவன்; இன்றேல், அவன் வாழ்க்கை நெருஞ்சிமுள் நிறைந்துள்ள நெறியில் பிரயாணஞ் செய்வதுபோலவாம். பகையின்றி வாழ்வது முடியாதென்று கருதுவதொழிந்து கூடுமானவளவும் பகையில்லாது வாழமுயல்வது ஒவ்வொருவர்க்கும் இன்றியமையாத கடமையாம். ஒருவனுக்கு அவன் வசிக்கும் ஊரார் பகைவராயிருப்பாராயின், அவன் எந்தக் காரியத்தையாவது கடைபோகச் செய்வது முடியுமோ? மனைவி மக்கள் முதலாயினரையும், மாடு மனை காணிமுதலியவற்றையும் துக்க வடிவமெ

னக் கண்டு, உண்மையாகத் துறவறத்தை மேற்கொண் டொழுகுகின்றவராகிய சந்நியாசிகளுக்கும் உண்டி, உடை, உறையுள் முதலியவற்றிற்காகப் பிறருடைய உதவி அவசியமாக வேண்டுவதாமாயின், இல்வாழ்க்கை நிலையிலிருந்தொழுகுகின்றவனுக்குப் பிறருடைய உதவி அவசியமாக வேண்டுமென்பது பற்றிச் சொல்லுதலும் வேண்டுமோ? இல்லறத்தான் பிறருதவியின்றி வாழ் வது எவ்வாற்றானும் முடியாதாகலின், அவன் தான் வசிக்கும் ஊராருடன் பகைகொள்ளாமலொழுகினுற் ருன், அவனது குடும்பம் கவலையின்றி வாழ்வதற்குரிய தாம்.

பகை உண்டாவதற்குக் காரணம் என்னவென்று நன்கு சீர்தூக்கி நோக்குவோமாயின், அக்காரணம் கோபமேயாமென்பது நன்கு விளங்கும். இதனுற்றான் பெரியார் "கோபமே கொடும்பகை" என்று திருவாய் மலர்ந்தருளினர். கோபமுண்டாவதற்குக் காரணமெ ன்னவென்று நோக்குவோமாயின், அக்காரணம் பே தைமையும் புல்லறிவாண்மையுமாமெனச் செவ்விதாகத் தோன்றும். பேதைமையாவது செய்வது இது தவிர் வது இது என்பனவற்றுள் ஒன்றுமறியாமையாம்; புல் லறிவாண்மையாவது ஒருவன் தான் சிற்றறிவினனு யிருந்தே தன்னைப் பேரறிவினனுக மதித்து, உயர்ந் தோர் கூறும் உறுதிச் சொற்களை யேற்றுக்கொள்ளா திருத்தலாம். இவ்விரண்டாலுமே கோபமுண்டாகின் றது; அதனுல் பிறரோடு பகைத்தல் சம்பவிக்கின்றது. இல்வாழ்க்கை நிலையிலிருந்தொழுகுகின்றவன் கோபத் திற்குக் காரணமாய பேதைமையும் புல்லறிவாண்மையு மில்லாதிருப்பானுயின், அவன் தான் வசிக்கும் ஊரா ரோடு பகைத்தல் ஒருவாற்றானுமில்லையாம். பகைக்

குக் காரணம் கோபமாம், கோபத்திற்குக் காரணம் பேதைமையும் புல்லறிவாண்மையுமாமென்று நன்கு துணிந்து, பேதைமையையும் புல்லறிவாண்மையையும்பிரயத்ன பூர்வகமாக ஒழித்து எவர்மீதும் கூடுமானவளவும் கோபஞ்செய்யா திருப்பவனுக்குப் பகைவரில்லாமையால், அவன் தான் கருதியவனைத்தையும் பெற்றுச் சுகமாக வாழ்தற்குரியவனவன்.

தான் வசிக்கும் ஊராரோடு பகைத்திருப்பவனுக்கு அவ்வூராருள் எவரும் உதவி செய்வதின்மையின், அவன் எவ்வளவு சம்பத்துடையவனாயினும், சுகஜீவியாய் வாழ்வதில்லையாம். அவனெப்போதும் யார் என்ன செய்யப்போகின்றனரோ? என்று நடுக்கமடைதற்குரியவனாகின்றான். அவன் வீட்டில் கள்வர் புகுவது எளிதாம். கள்வர் 'இவன் தான் வசிக்கும் ஊராருடன் பகைகொண்டிருக்கின்றான்; இவனுக்குதவிசெய்ய வருவாரொருவருமிலர்' என்றுணர்வாராயின், அச்சமின்றி, அவன் வீட்டிற்குக் கொள்ளையிட வருவர். அவன் வீட்டில் நடக்கும் சுபாசுபங்கள் சிறப்பாக நடைபெறுவதில்லையாம். அவ்வூரார் அவனை அதோகதியி லழுத்தச் சமயம் பார்த்தேயிருப்பர். அவனை அவ்வூரார் யாவரும் "சீ! இவன் கெட்டான்; பொறாமைப் பேய் பிடித்தவன்; அயல்வீடு வாழ்ந்தால் ஐந்து பட்டினி கிடக்கின்றான்; தானே வாழவேண்டும், மற்றவரெல்லாரும் தனக்குக் கீழ் அடங்கி யிருக்கவேண்டுமென்று கருதி, நம்மைக் கெடுக்கப்பார்க்கிறான்; தன் பேச்சுக்கு மாறுசொல்லுவாரைத் தரையோடு தரையாக்கப் பார்க்கின்றான்; இவனை யெவ்வாறாகவாவது ஒழித்துவிடவேண்டும்" என்றன்றோ வெண்ணுவர்? ஊராரோடு பகைகொள்ளுகின்றவன் தனக்கேயன்றித் தனது மக்

கள் மனைவி முதலாயினோர்க்குந் துன்பத்தை யுண்டாக்கிக் கொள்ளுகின்றனன். ஊரார் சமயம் வந்தபோது அவனை மாத்திரமா வருத்துவர்; அவன் மக்கள் மனைவி முதலாயினாரையுமன்றோ வருத்துவர்? தான் வசிக்கும் ஊராருடன் பகைப்பவனுக்குப் பலவழியாலும் தீங்கே யுண்டாதலின், அவன் வமிசத்துடன் கெடுவானென்பதற்கு ஐயப்பாடென்பது அணுமாத்திரமாகவேனுமின்றாம். ஊராருடன் பகைப்பவனுக்குப் புகழுண்டாவதில்லை யென்பதை நன்கு கவனித்தல் வேண்டும். புகழில்லாது வாழ்பவனுக்கும் வனமிருகத்திற்கும் வேற்றுமையாதாம்? ஆனால், வனமிருகத்தைக் குறிப்பிட்டிகழ்ந்து பேசுவா ரொருவருமிலராவர்; இவனையோ ஊரார்.அனைவரு மிகழுகின்றனர். இவ்வாற்றால், இவன் வனமிருகத்தினும் இழிந்தவனாகின்றான். தான் வசிக்கும் ஊராரோடு பகைகொண்டிருப்பவன், அவ்வூரா ருள் ஒவ்வொருவரையுங் கண்டவிடத்து இவர் என்ன செய்வாரோவென்று சந்தேகமுடையவனாக விருப்பான். சந்தேகமுடைய மனம் சஞ்சலத்திற் குறைவிடமாக விருத்தலின், அவன் எப்போதும் துக்கமுடையவனாகவே யிருப்பன். இவன் பேதைமையும் புல்லறிவாண்மையு முடைமையால் பிறர்மீது கோபித்து, அவரை யிகழ்ந்து கெடுக்குமாறு முயலுகின்றான். இவன் செய்கையை யறிந்த ஊராரோ இவனை வம்சத்தோடு கெடுக்க முயலுகின்றனர். அதனால் இவனை இவன் வம்சத்துடன் சந்தர்ப்ப முண்டாயபோது அவ்வூரார் கெடுத்து விடுகின்றனர். இவ்வாறு கெட்ட குடும்பங்கள் பலவுளவென்பது யூகித்து நோக்குவோமாயின், விளங்குவதாம்.

ஊரரோடு பகைப்பவனுக்கு அவ்வூரார் உதவி செய்யாவிடினும், அவ்வூரிலேனும் அவ்வூர்க்கடுத்த ஊரிலேனும் பெரியாரிருக்கமாட்டாரா? அவர் இவனுக் குதவி செய்யமாட்டாரா வென்று வினவுதல் கூடும்? அவர் அவனுக்கு உதவி செய்வாராயின், அவன் பல வகைத் தீங்கினை ஊரார்க்குச் செய்வானாகலின், அது பற்றி அவர் அவனுக்கு

"தீயாரைக் காண்பதுவுந் தீதே திருவற்ற
தீயார்சொற் கேட்பதுவுந் தீதே-தீயார்
குணங்க ளுரைப்பதுவுந் தீதே யவரோ
டிணங்கி யிருப்பதுவுந் தீது."

என்று பெரியாரருளியிருத்தலை யுட்கொண்டு, ஓருதவி யுஞ் செய்வதில்லையாம். அதனாலவன் கதி அதோகதி யேயாம்.

கோபம் மக்களுக்கு அவமானத்தையும் நாசத் தையுமுண்டாக்குகின்றதென்றுணர்ந்து, கோபமின்றி வாழ்பவர் பகையின்றி வாழ்பவரென்று தெளிந்திருப் பவர் "குற்றமொன்றும் பாராட்டித் திரிய வேண்டாம்" என்னும் உலகநீதிக் குரியவராய் வாழ்வர்.

செல்வமில்லாதவன் தான் வசிக்கும் ஊராருடன் பகைகொள்ளுவதில்லை யென்பது வெளிப்படையாமாக லின், செல்வமுடையவன் கோபமுடையவனுயிருப்பா னுயின், அவன் ஊராருடன் பகைத்துத் தன் வம்சத் துடன் கெடுதற்குரியவனுகின்றுன். "நான்குகை தட்டி னல் ஓசை எழும்; ஒருகை தட்டினல் ஓசையெழாது" என்னும் பழமொழியை நன்குணர்ந்து நோக்கினல், ஊராருடன் பகைகொண்டிருப்பவன் எவ்வளவு சாமர்த் தியமுடையவனுயிருப்பினும், அவ்வூராரினின்றும் தப்

பிப் பிழைப்பது முடியாதென்பது மாறுபாடின்றி விள ங்குவதாம்.

"ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்(ஒருவன் தான் வசிக்கும் ஊராருடன் பகைகொள்வானாயின், அவன் தன் வமிசத்துடன் கெடுவான்)" என்று கூறப் பட்டதாயினும், ஆற்றலாலோ தவத்தாலோ உயர்ந்தா ரோடு பகைப்பவனும் தவறாது தன் வமிசத்துடன் கெடு வானென் றுணர்தற்பாலதாம். இராவணன் இராமனோடு பகைத்துத் தன் வமிசத்துட னழிந்தானென்பதையும், துரியோதனன் பாண்டவரோடு பகைத்துத் தன் வமி சத்துடனழிந்தானென்பதையும், இவைபோன்ற பிறவற் றையும் நாம் நூல்கள் வாயிலாக நன்குணர்வோமாயின், ஊராருடன் பகைத்தலேயன்றி உயர்ந்தாருடனும் பகை த்தல் கூடாதென்பது தெளிவாகவிளங்கும். ஊரார் பகை யாவதற்குக் காரணம் கோபமேயன்றிப் பிறர் மனைவிய ரை விரும்புதலென்னுங் காமமுமாம். இவ்விரண்டு குற்றமும் இல்வாழ்க்கை நிலையிலிருந் தொழுகுகின்றவ னிடத்து இல்லாதிருக்குமாயின், அவன் தான் வசிக் கும் ஊராருடன் மேன்மேலும் பெருகவாழ்தற்குரியவ னாய், இம்மையிற் புகழையும், மறுமையில் சுவர்க்கத் தையு மடைவானென்பது நிச்சயமாம்.

"இகலிற் கெதிர்சாய்த லாக்க மதனை
மிகலூக்கி னூக்குமாங் கேடு

தன்னுள்ளத்துப் பகைதோன்றியவிடத்து அதனை யெதிர்தலையொழிதல் ஒருவனுக்குச் செல்வமாம்; அவன் அது செய்யாது அப்பகையினிடத்து மிகுதலை மேற் கொள்ளுவானாயின், கேடுந் தன்னிடத்து வருதலை மேற் கொள்ளுவான்" என்று திருக்குறள் கூறுவது இங்கு நன்குணர்தற் பாலதாம்.



## 7. எண்ணுமெழுத்துங் கண்ணெனத்தகும்.

---

இல்வாழ்க்கை நிலைக்குச் சொல்லுகின்ற நெறியின் கண் நின்று அவ்வாழ்க்கைக்குத் துணையாகிய கற்புடைய மனைவியோடு கூடி வாழுகின்றவன்: ஈகை முதலியவற்றால் இம்மைப்பயனாகிய புகழையும், மறுமைப் பயனாகிய சுவர்க்கத்தையும், அகத்துறவு வாயிலாகவோ புறத்துறவுவாயிலாகவோ மெய்யுணர்வினைப் பெரியார் வாயிலாகப் பெற்று அதனால் மோட்சத்தையும் அடைதற்குரியவனாக விருத்தலின், அவன் இளமையிற் கற்றதனோடு நில்லாது அறம் பொரு ளின்பம் வீடு என்னும் புருஷார்த்தநான்கையும் உள்ளவாறுணர்ந்து, அவற்றைப் பெறுதற்பொருட்டு, தருக்கநூலையும் இலக்கண நூலையும் தக்கார் வாயிலாக உணர்தல் இன்றியமையாததாம். தருக்கநூலையும் இலக்கண நூலையும் உணராதவர்க்கு அறத்தைச்செய்யும் வகை, பொருளைச் சம்பாதிக்கும் வகை, இன்பத்தையனுபவிக்கும் வகை, மோட்சத்தைப் பெறும்வகை யென்பனவற்றை உணர்த்தும் நூல்களைத் தக்கவாறுபடித்து, அவற்றின் பொருள்களை யுள்ளவா றுணர்தல் ஒருவாற்றானும் பொருந்துவ தில்லையாம்.

தருக்க நூலையும் இலக்கணநூலையும் அவசியமாகக் கற்கவேண்டுமென்பதை வற்புறுத்தவே, மேதுஞானத்தாயாகிய ஔவைப் பிராட்டியார், ஆத்திசூடியில் "எண்ணெழுத் திகழேல் (தருக்கநூலையும் இலக்கணநூலையும் நீ யிகழாது கற்பாயாக)" என்றருளியதோ டமையாது, கொன்றைவேந்தனில் "எண்ணுமெழுத்துங் கண்ணெனத்தகும் (தருக்கநூலும் இலக்கண

நூலும் மக்கட்கு இரண்டு கண்களென்று சொல்லத் தகும்)" என்றும் திருவாய் மலர்ந்தருளினர். தருக்க நூலும் இலக்கண நூலும் கற்பதவசியமாமென்பது தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனர் † "எண்ணெ ண்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங், கண்ணெ ன்ப வாழு முயிர்க்கு", "கண்ணுடைய ரென்பவர் கற் ேறார் முகத்திரண்டு, புண்ணுடையர் கல்லா தவர்" என்றருளி யிருப்பதனுலும் செவ்விதாக விளங்குவ தாம்.

அறம் பொருள் இன்பம் வீடென்னும் உறுதிப் பொருள்களை உணர்த்தும் பொருள் நூல்களைத் தருக்க நூல் இலக்கண நூ லென்னுங் கருவி நூல் வாயிலாக உணர்ந்தவர் தாமிருக்குந் தேயத்துள்ள பொருள்களை யேயன்றி, வெவ்வேறு தேயங்களிலுள்ள பொருள் களையும் வெவ்வேறு காலங்களிலுள்ள பொருள்களையும் அறியும் அறிவுடையராதல் நிச்சயமா மாகலின், நம்ம ேைருள் ஒவ்வொருவர்க்கும் தருக்க நூலையும் இலக் கண நூலையும் கற்பது இன்றியமையாத கடைமையாம். "இலக்கண நூலை மாத்திரம் கற்பது போதாதோ? தரு க்க நூலையும் ஏன் கற்றல்வேண்டும்; தொன்னைக்கு நெய் ஆதாரமா! நெய்க்குத் தொன்னை யாதாரமா என்ருற் போன்று விதண்டை பேசுவதைக் கற்பிப்பதன்ருே தரு க்கநூல்; 'தருக்கம் படித்துத் தலைவெடித்துப் போகா

† பரிமேலழகர் எண் என்பதற்குக் கணிதநூல் என்று பொருள் கூறியது தருக்கநூல் கணிதநூலின் ஒருறுப்பாயடங் குவது பற்றியாம்;அதுபற்றி, அவர் அவ்வாறு கூறினரென்றிங் குணர்தல் வேண்டும். இதனுல் தருக்கநூலை யோதுதல் கூடா தென்பது அவர் கருத்தன்றென்பது நன்குவிளங்கும்.

மல்' என்று பெரியார் கூறியிருப்பதனால், தருக்கநூலைப் படிப்பது கூடாதென்பது விளங்கவில்லையா?" என்று சிலர் ஆசங்கித்தல் கூடும்? இதுபயனற்ற ஆசங்கையாம். இலக்கண நூலைப் படித்தலே போதும்; தருக்கநூலைப் படிப்பது அநாவசியகமாமென்று கூறுவது எனக்கொரு கண் இருந்தால் போதும், இரண்டு கண் வேண்டுவதில்லை யென்பது போலவாம். இலக்கணநூ லுணர்ச்சியில்லாதவர்க்குத் தருக்கநூ லுணர்ச்சி யுண்டாதல் கூடாமையின், இலக்கணநூலை யுணர்ந்தவரே தருக்கநூலை யுணர்தற்குரியவராவர். இஃது "ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா, மாற்றங் கொடுத்தற் பொருட்டு- சொல்லிலக்கண நெறியானே † அளவை நூலை ‡ அமைச்சர் உட்பட்டுக்கற்க, வேற்று வேந்தர் அவையிடை யஞ்சாது அவர் சொல்லிய சொற்கு உத்தரஞ் சொல்லுதற் பொருட்டு" என்று திருவள்ளுவர் கூறுதலால், நன்கு விளங்கும். சொல்லிலக்கண நூலைக் கல்லாதவர்க்குத் தருக்கநூலைக் கற்பது முடியாதாகலின், தருக்கநூலைக் கற்றற்பொருட்டுச் சொல்லிலக்கண நூலைக்கற்பது அவசியமாம். சொல்லிலக்கண நூலுணர்ச்சி எழுத்திலக்கண நூலுணர்ச்சியும், பொருளிலக்கண நூலுணர்ச்சியும் இல்லாதவிடத்துச் செவ்விதாக உண்டாவதில்லையாம். ஆகவே, எழுத்து, சொல், பொருளென முத்திறத்ததாக விளங்கும் இலக்கணநூலைக் கற்றவர்க்கே தருக்கநூலைக் கற்பது வாய்ப்பதாமென்றிங்குணர்தற் பாலதாம். இலக்கண நூல் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி யென ஐந்து கூறுபாடுடையதா யிருக்க, அதனை எழுத்துச்.சொல் பொருளென மூன்று கூறுபாடுடையதாகக் கூறுவதமையுமோ வெனின், யாப்பும், அணியும், பொரு

† அளவைநூல்-தருக்கநூல். ‡ அமைச்சர்-மந்திரிகள்.

ளில் அடங்குதலின், அமையும். இது தொல்காப்பியம் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரமென முக்கூறுபாடுடையதாக விருத்தலால் நன்கு விளங்கும். "எண் ணுமெழுத்துங் கண்ணெனத் தகும்" என்றுகூறப்படுதலால், தருக்கநூலுணர்ச்சியின்றி இலக்கணநூலுணர்ச்சி மாத்திரமுடையவர் ஒற்றைக் கண்ணர்போல்பவராவர்; இலக்கணநூலுணர்ச்சியுமின்றி யிருப்பவரோ எதனையும் செவ்வையாக அறிதற் குரியவராகாதிருத்தலின், அவர் குருடர்போல்பவராவர். வடநூலார் "தருக்கவியாகரண (இலக்கண) மென்னு மிரண்டுமே மக்கட்கிருகண்ணாகும்" என்று கூறுவதனாலும், அவை யிரண்டனுணர்ச்சியு மில்லாதவர் ஊன (மாமிச)க் கண்ணுடையவராயிருப்பினும், வெவ்வேறு தேயங்களிலும் வெவ்வேறு காலங்களிலும் நிகழுவனவற்றை யறிதற் குரிய ஞானக்கண் ணில்லாதவரா யிருத்தலின், அவர் ஒருவகையால் குருடரே யாவ ரென்பதற்கு யாதோர் ஐயப்பாடுமின்றாம்.

இலக்கணமாவது இலக்கியத்தின் அமைதியாம். பிருதிவி (மண்) நாற்றமுடையது; அப்பு (நீர்) குளிர்ந்த பரிசமுடையது; தேயு (தீ) சுடும் பரிசமுடையது என்றவிடத்துப் பிருதிவி, அப்பு, தேயு என்பன இலக்கியமாம்; நாற்றமுடைமை, குளிர்ந்த பரிச முடைமை, சுடும் பரிச முடைமை யென்பன இலக்கணமாம். அவ்வியாத்தி, அதிவியாத்தி, அசம்பவமென்னும் முக்குற்றமு மில்லாதது இலக்கணமா மென்றிங் குணர்தல் வேண்டும்.

1. இலக்கியத்தின் ஏக தேசத்தில் இலக்கண மிருத்தல் அவ்வியாத்தியாம்; அது குடுமி யுடையவர் மனிதரென்றாற் போல்வதாம்.

2. இலக்கிய மல்லாததன் கண்ணும் இலக்கண மிருத்தல் அதிவியாத்தியாம்; அது மூக்குடையவர் மனிதர் என்றாற் போல்வதாம்.

3. இலக்கணம் இலக்கிய முற்றுமிராமை அசம்பவமாம்; அது வாலுடையவர் மனிதர் என்றாற் போல்வதாம்.

'எண்ணு மெழுத்துங் கண்ணெனத்தகும்' என்னும் வாக்கியத்தின்கணுள்ள எழுத்தென்னும் இலக்கணம் எழுத்துச் சொல் பொருள் என்பனவற்றின் இலக்கணங்களை யுணர்த்திநின்ற தென்றிங் குணர்தல் வேண்டும். பழமென்பது மருத்துவ (வைத்திய) நூலில் எலுமிச்சம் பழத்தையும் மற்றவிடத்தில் வாழைப்பழத்தையு முணர்த்துவதுபோல, இங்கு இலக்கண மென்பது எழுத்துச் சொல் பொருளென்பனவற்றின் இலக்கணங்களை யுணர்த்தி நின்றது. எழுத்துச் சொல் பொருளென்பனவற்றின் இலக்கணங்களையுணர்த்தும் நூலே இங்கு இலக்கணநூலென்று கூறப்படுகின்றது. எழுத்துச் சொல் பொருளென்பனவற்றின் இலக்கணங்கள் தொல்காப்பியம், வீரசோழியம், இலக்கண விளக்க மென்றற்றொடக்கத்து நூல்களின் ஆராய்ச்சியால் விளங்குவனவாம். இவைதாம் இலக்கண நூல்கள்.

தருக்கமாவது விசாரவடிவமாம்; அஃதாவது யுக்தியாம். யுக்தியாவது இது கூடும், இது கூடாதெனத் தோன்றும் அறிவாம். இஃது அநிஷ்டத்தைச் சம்பாதித்துத் தருவதாம். புகை தீயில்லாவிடத்தும் இருக்கும் என்றொருவன் கூறுவானாயின், அவனுக்குத் தருக்க நூலுணர்வுடையான், புகை தீயின் காரியமன்றாதல்வேண்டும்; புகை தீயின் காரியமா யிருத்தலின், தீ யில்லா

விடத்துப் புகையிராது என்று கூறுகின்றான்; அதனு லவன் புகையுள்ள விடத்துத் தீ யிருத்தல் வேண்டுமெ ன்று தனக்கிஷ்டமில்லாமலே யங்கீகரிக்கின்றான். இவ் வாறங்கீகரிக்கச்செய்வதற்கேது தருக்கமாயிருத்தலின், தருக்கம் விதண்டை பேசுவதற்குச் சாதகமாவ தில்லை யாமென்று நன்குணர்தல் வேண்டும். பெரியார் "தரு க்கம் படித்துத் தலைவெடித்துப் போகாமல்" என்று கூறியது தருக்க நூலைப் படித்தபின் பொருள் நூலைப்படி க்கமுயலாது தருக்கநூலையே படித்துக் காலங் கழிப்ப வரை நோக்கியதாம்.

தருக்கம் அநுமானப் பிரமாணத்திற்கு உபகாரமா யிருத்தலின், உபசார வழக்கால், பிரமாண முதலிய வற்றைக் கூறும் நூல் தருக்கநூல் என்று கூறப்படுகின் றது. தருக்கநூல் அநுமானப் பிரமாணமே நியாய மென்றும், அதற்குபகாரமாக விருப்பது தருக்கமென் றும் கூறுகின்றது. பிரமாண முதலியவற்றைக் கூறும் நூல்கள் தருக்கபரிபாஷை, தருக்க கௌமுதி, தருக் காமிர்தம், நியாயப்பிரகாச முதலியனவாம். இவை தாம் தருக்கநூல்கள்.

இலக்கண நூலைப்படித்து, பின் தருக்க நூலைப்படி ப்பவர்க்கு அறம் பொருள் இன்பம் வீடென்னும் உறு திப் பொருள்களைக் கூறும் பொருள் நூல்களின் அர்த் தம் மிகு எளிதாக விளங்குவதாம். இவ்விளக்கத்தி ற்குக் காரணம் இலக்கண நூலுணர்ச்சியும் தருக்கநூ லுணர்ச்சியுமாக விருத்தலின், அவை மக்கட்கு இரண்டு கண்கள் போல விருக்கின்றன. இக்கண்களுடையவர் கொடுநெறியிற் செல்லாது செந்நெறியிற் செல்லுவராத லின், அவர் இம்மைப் பயன், மறுமைப்பயன், மோட்ச

மென்பவற்றை முறையே யடைதற் குரியவராகின்ற னர்.

இலக்கண நூலுணர்ச்சியும் தருக்க நூலுணர்ச்சியும் நம்மனோர்க் கின்றியமையாதனவா மென்பது பின் வரும் செய்யுள்களா லினிது விளங்குவதாம்.

> "ஆதி முதலொழிய வல்லா தனவெண்ணி
> னீதி வழுவா நிலைமையவான்-மாதே
> யறமார் பொருளின்பம் வீடென் றிவற்றின்
> றிறமாமோ வெண்ணிறந்தாற் செப்பு".

(ஆதிமுதலொழிய—தலைமைவாய்ந்த வேதமென்னும் முதனூல் தவிர; நீதிவழுவாம்—நீதியினின்றும் பிறழ்ந்தனவாகிய; எண்-தருக்கம்).

> "எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தான்
> மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகு—மொழித்திறத்
> முட்டறுத்த நல்லோன் முதனூற்பொருளுணர்ந்து [தின
> கட்டறுத்து வீடு பெறும்."

(எழுத்து - இலக்கணம்; இழிதகைமை - அறியாமை; முதனூல்-வேதம்).



## 8. ஏவா மக்கள் மூவா மருந்து.

---

இல்லறத்தான் இல்லறவாழ்க்கையில் எவ்வளவு மேம்பாடுடையவனாக விருப்பினும், தனது குறிப்பினை யறிந்து தான் விரும்பிய காரியத்தைத் தானிதனைச் செய் யென்று கட்டளையிடுதற்கு முன்னரே செய்யும் மக்களை யுடையவனாகாதிருப்பின், அவன் வாழ்க்கை பயனுடைய

வாழ்க்கையாவதன்றும். ஒருவனுடைய வாழ்க்கை மேன்மையுறுதற்குக் காரணம் அவனுடைய பிள்ளைகள் அவனது குறிப்பினையறிந்து ஒழுகுதலுமாம். இல்வாழ்க்கைக்கு அணிகலமாக விரும்பவர் நன்மக்களாதலின், அம்மக்களில்லாவிடத்து, இல்வாழ்க்கை சிறந்து தோன்றுவ தில்லையாம். தந்தையொருவழியில் ஒழுக,மைந்தர் மற்றொருவழியிலொழுகவுள்ள வாழ்க்கை ஏறுமாறுய வாழ்க்கையாமாதலின், அவ்வாழ்க்கை எஞ்ஞான்றும் துக்கவாழ்க்கையேயாம். தமது தந்தை தாயர் இது செய்யவேண்டுமென்று கருதியுள்ள காரியத்தை, அவர்கள் இதனைச் செய்யென்று தமக்குக் கட்டளை யிடுதற்கு முன்னரே அவர்களது முகக்குறிப்பாலறிந்து செய்பவர் தாம் உண்மையாய மக்களாவர். இம்மக்களை யுடையவர்க்கு ஒருவாற்றானுந் துன்பமுண்டாவ தில்லையாம்.

தந்தை தாயரது தீவினை குறைதற்பொருட்டு, அவர்களை நோக்கி மக்கள் செய்யும் தானதருமங்களால், அவர்கள் நற்கதியடைகின்றனரென்பது நூற்களின் றுணிபாமாதலின், இது செய்யென்று தமது தந்தை தாயர் கட்டளை யிடுதற்கு முன்னரே அதனை அவர் குறிப்பறிந்து செய்கின்ற மக்கள்தாம் தமது தந்தை தாயர்க்கு அவர்களிறந்த பின்னரும் நன்மை செய்தற்குரியவராயிருக்கின்றனர். இம்மக்களைப் பெறுவதற்கு இவர்களது தந்தை யாது தவஞ் செய்தானோவென்று தமது அறிவையும் ஒழுக்கத்தையுங் கண்டோர் கூறுமாறொழுகுகின்ற மக்கள் எப்போதும் தமது தந்தை தாயரின் குறிப்பறிந் தொழுகுகின்றவரா யிருப்பரென்பது சீராமரது சரித்திரத்தையும், வீஷ்மரது சரித்திரத்தையும்

உய்த்துணர்ந்து நோக்குவோர்க்கு நன்கு விளங்குவதாம்.

சீராமர்க்குத் தசரத மகாராஜா மணிமுடிபுனைய ஏற்பாடு செய்திருந்த போது, மந்தரையின் வஞ்சகச் செயலால் கைகேசி நெஞ்சு கலங்கி, தனக்குச் சம்பராசுர யுத்தத்தில் தசரதர் தருவேனென்று கூறியவரங்களிரண்டனையும் பெறக்கருதி, தசரதரை நோக்கி முன்னர்த் தாங்கள் தருகின்றேனென்று கூறியவரமிரண்டனையுந்தருதல் வேண்டுமென்றாள். அவற்றைப் பெற்றுக் கொள்வாய் என்று தசரதர் கூறினர். முதலாவதுவரம் சீராமன் பதினான்கு வருஷம் காட்டிற்குப் போகவேண்டுமென்பதாம்; இரண்டாவதுவரம் பரதன் மணிமுடி புனைந்து உலகாள வேண்டுமென்பதா மென்று கூறினள் கைகேசி. அவற்றைக்கேட்டுத் தசரதர் பலவாறு கூறினர்; கைகேசி அவற்றிற்கு இணங்கவில்லை. அதனால் அவர் மூர்ச்சையாய் விழுந்துவிட்டனர்; உடனே கைகேசி ஏவலாளர் வாயிலாகச் சீராமரைத் தன்னிடத்திற்கு வருமாறு செய்து அவரை நோக்கி,

"ஆழிசூ ழுலக மெல்லாம் பரதனே யாள நீ போய்த்
தாழிருஞ் சடைக டாங்கித் தாங்கருந் தவமேற் கொண்
பூழிவெங் கான நண்ணிப் புண்ணியத் துறைக ளாடி [டு
ஏழிரண் டாண்டின் வாவென் றியம்பினன் அரசன்"

என்று கூறினள். உடனே, சீராமர் ஒரு கலக்கமுமின்றித் "தந்தைசொன் மிக்க மந்திர மில்லை" என்று பெரியா ரருளியிருப்பதனைத் தம்முளத் தெண்ணி, தசரதர் தம்மையழைத்து நீ பதினான்கு வருஷம். வனஞ் சென்று வரக் கடவாயென்று கூறுவதற்கு முன்னரே,

அவர் குறிப்பறிந்து காட்டுக்குச் சென்றனரென்று இராமயணங் கூறுகின்றதன்றோ?

சந்தனு மகாராஜா ஸத்தியவதியை மணம்புரிய விரும்பியபோது, அவர் புத்திரராகிய காங்கேயர் அவர் குறிப்பறிந்து, ஸத்தியவதியின் தந்தையினிடத்துச் சென்று யான் விவாகஞ் செய்து கொள்வதில்லை யென்று உறுதிப்பாடு செய்துகொண்டு,

"விரதமுற் றியவா றனைவருங் கேண்மின்
மெய்யுயிர் வீடுமன் றளவும்,
சரதமுற் றியமெய்த் தாதுவு மூலத்
தழலுடன் மீமிசைதமுந் தகைக்கே,
இரதமுற் றியசொன் மகப்பெறு தவருக்
கில்லையென் றியம்புநற் கதியும்,
சுரதமுற் றியவென் றந்தைதன் பொருட்டாற்
பெறுவல்"

என்று கூறி, பயங்கரமாய விரத முடையவனை னப் பொருள்படும் பீஷ்மனென்னும் பெயரைப் பெற் றனரென்று பாரதங் கூறுகின்றதன்றோ?

இச்சரித்திரங்களால் யாது விளங்குகின்றது? "ஏவா மக்கள் மூவாமருந்து=இதனைச் செய்வீராகவென்று தமது தந்தைதாயர் ஏவாமலிருக்க, அவர்தம் குறிப் பறிந்து செய்யுமக்கள் அவர்களுக்கு மூத்துக்கெடா மைக்குக் காரணமாகிய அமிர்தம்போலாவர்" என்பதன் றோ விளங்குகின்றது?

தந்தை தாயர் இது நன்மையைத் தருவதென்று சொல்லவும் அதனைச் செய்யாத மக்கள் அவர்களுக்கு விஷம்போலத் தீமையே செய்தற்குரியவராவர். தந்தை

தாயர் இது நன்மையைத் தருவதென்று சொல்லவும் அதனைச் செய்யாத மக்கள் தாமே இது நன்மையைத் தருவதென்றுணர்ந்து, அதனைச்செய்வது ஒருவாற்றானு மில்லையாம். இம்மக்கள் நிலத்திற்குப் பொறையாயிருக் கின்றன ரன்றி, இவர் வாயிலாக ஒரு நன்மையு முண் டாவ தில்லையாம்.

இது செய்யென்று தமது தந்தை தாயர் ஏவுத ற்கு முன்னரே அவர்தம் குறிப்பினையறிந்து, வித்தி யாப்பியாசஞ்செய்தல், நல்லாரோடிணங்கி யொழுகுதல், சன்மார்க்கத்திற் சென்று பொருள் தேடுதல், தமது பெரியோர்கள் செய்த தருமங்களை மறவாது செய்தல், துன்மார்க்கத்தில் மறந்துஞ் செல்லாதிருத்தல் முதலிய உத்தமகுணங்களை யுடைய மக்கள் தம் தந்தை தாயர் க்கு அமிர்தம் போல விருப்பர்; மேற்கூறிய குணங்களு க்கு மாறுய குணங்களையுடைய மக்களோ தம் தந்தை தாயர்க்குவிஷம்போல விருப்பர். இம்மக்களினிருப்பால், அவர்களுக்கு இகபர மிரண்டிலும் நன்மையுண்டாவ தில்லையாம்; தீமையுண்டாவதோ தவறுவதில்லையாம்.

"தவமதுசெய் தேபெற் றெடுத்தவன் முதற்பிதா
தனைவளர்த் தவனொருபிதா,
தயையாக வித்தையைச் சாற்றினவ னொருபிதா
சார்ந்தசற் குருவொருபிதா;
அவமறுத் தாள்கின்ற வரசொரு பிதாநல்ல
வாபத்து வேளைதன்னில்,
அஞ்சலென் றுற்றதுயர் தீர்த்துளோ னொருபிதா
அன்புள முனோனொருபிதா;
கவளமிடு மனைவியைப் பெற்றுளோ னொருபிதா
கலிதவிர்த் தவனொருபிதா,

காசினியி லிவரைநித் தம்பிதா வென்றுளங்
கருதுவது நீதியாகும்."

என்று பெரியார் கூறுவதால், மக்கள் தம்தந்தை தாய ர்க்கேயன்றித் தம்மைவளர்த்தவர் முதலாயினோர்க்கும் அவர்க்குவேண்டியவற்றை அவர்கள் கூறுவதற்கு முன் னரே அவர்களது குறிப்பறிந்து செய்தல் வேண்டும். இவ்வாறெல்லாம் செய்கின்ற மக்கள்தாம் அமிர்தம் போன்றவ ராவர்.

நல்லினத்தோடு சேர்தல், இன்சொற் கூறுதல், இரப்பவர்க்கில்லையென்னுதீதல் முதலியவற்றையுடைய மக்கள் எஞ்ஞான்றுந் தம் தந்தை தாயர்க்கு மாறாகவொ ழுகுவதில்லையாம். அவர்கள் எஞ்ஞான்றும் தம் தந்தை தாயர்க்கு வேண்டியவற்றை அவர் தம் குறிப்பறிந்து அவர் கூறுதற்குமுன்னே செய்வதன்றி, கூறியபின் செய்வதேயில்லையாம். தந்தை தாயர் கூறியதை அசட் டைசெய் தொழுகுமக்களோ

"கல்லென்று தந்தை கழற வதனைப்போர்
சொல்லென்று கொள்ளா திகழ்ந்தவன்—மெல்ல
எழுத்தோலை பல்லார்முன் னீட்டவிளியா
வழுக்கோலைக் கொண்டு விடும்."

என்று நாலடியார் கூறுவதற் கிலக்கியமாகி, அவ மானமடைதல் திண்ணமாம்.

தம் தந்தை தாயரது சொல்லுக்கெதிர்த்துப் பேசாது, அவர்கள் தவறுநோக்கித் தண்டித்தவிடத்து, அவர்களை நிந்தியாது, அவர்கள் குறிப்பினை யறிந்து, அக்குறிப்பின்படி யொழுகுகின்ற பிள்ளைகள் நன்மை யென்று சொல்லப்படுவன வனைத்தும் பெறுதல் நிச்சய மாம். அவர்கள் தமது தந்தை தாயர்க்கு எப்போதும்

அமிர்தம் போன்று நன்மையே செய்தற்குரியவரா யிருக்கின்றனர்.

விடியற்காலத்தில் விழித்துக்கொள்ளும்போது தாம் செய்யவேண்டிய தருமங்களைப் பற்றியும் தேடவேண்டிய பொருள்களைப்பற்றியும் சிந்தனைசெய்து, தமது தந்தை தாயரைத் தொழுதுகொண்டே யெழுந்திருக்கும் மக்கள் தமது தந்தை தாயர் குறிப்பினையறிந்து, அவர்க ளிது செய்யவேண்டுமென்று கட்டளையிடு முன்னரே அதனைச் செய்தலின், அவர்கள் தம் தந்தை தாயர்க்கு எஞ்ஞான்றும் அமிர்தம்போன் றிருக்கின்றனர். இத்தன்மை வாய்ந்த மக்கள் பிறந்தகுடி யோங்கிவளர் வதன்றி ஒருபோதும் குறைவதே யில்லையாம்.

தந்தை தாயர் தம்மக்களைத் தாம் ஏவுதற்கு முன்னரே தாம் கருதியவதனைத் தங்குறிப்பறிந்து செய்து வருமாறு பழக்குவாராயின், அம்மக்கள் எஞ்ஞான்றும் அவர்களுக்கு மூவாமருந்தாக விருப்பார்களென்பதற்கு யாதோர் ஐயப்பாடு மின்றாம்.

“கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்று, மாறாநீர் வையக் கணி” என்று திருக்குறள் கூறுவது இங்கு நன்குணர்தற் பாலதாம்.



## 9. ஐயம் புகினுஞ் செய்வன செய்.

இல்வாழ்க்கை நிலைக்குச் சொல்லுகின்ற நெறியின்க ணின்றொழுகுகின்றவன் தான் செய்தற்குரிய காரியங்களைக் கடன்வாங்கியேனுஞ் செய்வதவசியமாம்; கடன்கொடுப்பா ரில்லாவிடத்துப் பிச்சையெடுத்தாயினுஞ் செய்வ தவசியமாம். அவனுக்குரிய காரியம் இல்

வாழ்க்கையைச் செவ்வையாக நடைபெறச் செய்வதாம். "பிச்சைபுக் காயினுங் கற்றல் மிகவினிதே", "கடன் கொண்டுஞ் செய்வன செய்த லினிதே", "செய்வன திருந்தச்செய்" என்று பெரியார் கூறியுள்ளவற்றை நன்கு கவனிக்குமிடத்து, செய்தற்குரிய காரியங்களைக் கடன் வாங்கியேனும், பிச்சையெடுத்தேனும் அவசிய மாகச் செய்தல் வேண்டுமென்பது பிறழாது விளங்குவதாம்.

"ஐயம் புகினுஞ் செய்வன செய் = நீ பிச்சையெடுத்தாயினுஞ் செய்தற்குரிய காரியங்களைச் செய்யக்கடவாய்" என்று நமது ஞானத்தாயாகிய ஒளவைப்பிராட்டியார் திருவாய்மலர்ந்தருளி யிருப்பதால், நாம் செய்தற்குரிய காரியங்களை மறவாதுசெய்யவேண்டு மென்பது பிறழாது விளங்குமன்றோ? வறுமை மிக்குப் பிச்சை யெடுப்பதற்குரிய நிலைமையி லிருப்பவரும் தாம் செய்தற்குரிய காரியங்களை மறவாது செய்துவருவாராயின், அவர் விரைவில் மேம்பாடாகிய நிலையை யடைவது நிச்சயமாம். "வறியோர்க் கழகு வறுமையிற் செம்மை" என்று நறுந்தொகை கூறுவதை நன்குணர்ந்து நோக்குமிடத்து, இல்லறத்தான் வறுமைமிக்குப் பிச்சையெடுப்பதற்குரிய நிலைமையைத் தீவினைவயத்தால் பெற்றவிடத்தும், தான் செய்தற்குரிய காரியங்களை மறவாது செய்தலே அவனுக்கு அழகாகுமென்பது பெறப்படுவதாம். பிரமசாரி, வானப்பிரஸ்தன், சந்நியாசி, ஆதாரமானவரால் விடப்பட்டவர், வறுமையுடையார், திக்கின்றித் தன்னிடத்து வந்திறந்தவர், பிதிரர், தேவர், விருந்தினர், சுற்றத்தார் என்னும் பதின்மர்க்கும் தனக்குரியபொருளைப் பங்கிட்டுண்பது இல்லறத்தானுக்கு முக்கியக் கடமையா மாதலின், இவ்வாறு பங்கிட்

டுண்பதே அவன் செய்தற்குரிய காரியமாம். இக்காரியத்தைச் செய்யாதிருப்பவன் எவ்வாற்றால் இல்லறத்தானவன்? அவன் ஒருவாற்றானும் இல்லறத்தானவனில்லையாம். ஒருவனது தருமகுணம் அவனிடத்துப் பொருளுள்ளபோது நன்கு விளங்குவதில்லையாம்; ஆனால், அவன் பொருளில்லாதவனுயவிடத்து நன்கு விளங்குவதாம். தருமகுணமுடையான் வறுமைமிக்கவிடத்தும் தான் செய்தற்குரிய காரியங்களைப் பிச்சையெடுத்தேனுஞ் செய்வன்; தருமகுணமில்லாதவனே வறுமைமிக்கவிடத்துத் தீயவழியிற்சென்று பொருளீட்ட முயலுவதல்லாது தான் செய்தற்குரிய காரியங்களைச் செய்வதே யில்லையாம். எவரேனும் ஒருவர் பொருளுள்ளகாலத்துத் தருமஞ் செய்பவராயிருந்து, வறுமை மிக்கவிடத்து அதனைச் செய்யாது விடுவாராயின், அவர் இடம்பத்திற்காகத் தருமஞ் செய்தாரன்றி உண்மையாகத் தருமஞ்செய்தாரில்லையென்று நிச்சயமாக அறியலாம். பழிபாவங்களுக்கேதுவாய செயல்களைச் செய்யுங்காலம் பிச்சையெடுத்துண்ணுங் காலமேயாம். அக்காலத்தில் ஒருவன் செய்வனவற்றைத் திருந்தச் செய்தொழுகுவது மிகவருமையாம் அக்காலத்தில் பழிபாவங்களுக்கேதுவாய செயல்களைச் செய்யாதவன் எக்காலத்திலும் பழிபாவங்களுக்கேதுவாய செயல்களைச் செய்வதில்லையாம்; ஆனால், புகழ் புண்ணியங்களுக்கேதுவாய செயல்களையே செய்து வருவானென்பது திண்ணமாம்.

வினைவிளைவுகளைத் தக்கார்வாயிலாக வுணர்ந்து அற (தரும) நெறியிலொழுகுகின்றவர் வறுமை மிக்கவிடத்து, பிச்சையெடுத்தேனும் தாஞ்செய்தற்குரியகருமங்களைச் செய்வதல்லாது, மற (பாப) நெறியிற்சென்று

தாஞ்செய்தற்குரிய காரியங்க ளாகாதனவற்றைச்செய்வ தில்லையாம். அவை பொய், களவு, கொலை முதலியன வாம். "இலனென்று தீயவை செய்யற்க செய்யி, னில னாகு மற்றும் பெயர்த்து—யான்வறியனென்று கருதி, அதுநீர்தற்பொருட்டுப் பிறர்க்குத் தீவினைகளை ஒருவன் செய்யாதொழிக; செய்வனாயின் பெயர்த்தும் வறியனா வன்" என்று திருக்குறள் கூறுவதை நன்குணர்ந்து நோக்கினால், பிச்சை யெடுக்குங்காலம் நேரிட்ட விடத் தும் புகழ்புண்ணியங்களுக் கேதுவாகிய செயல்களைச் செய்யவேண்டுமே யன்றி, மீண்டும் வறுமை யடைதற் கேதுவாகிய தீவினைகளைச் செய்வது கூடாதென்பது மாறுபாடின்றித் தோன்றுவதாம்.

"ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க, சான் றோர் பழிக்கும் வினை—தன்னைப்பயந்தாளது பசியை வறுமையாற் கண்டிரங்குந்தன்மைய னாயினானெனினும், அது சுட்டி அறிவுடையார் பழிக்கும் வினைகளை யொரு வன் செய்யாதொழிக" என்று திருக்குறள் கூறுவதை மறவாது ஞாபகத்திற்குக் கொண்டுவந்தொழுகுகின்ற வர் தமக்கு எவ்வகைத்தாய விபத்து நேர்ந்தவிடத்தும், நல்லனவற்றைச் செய்வதன்றி அல்லனவற்றைச் செய்வ தில்லையாம்; ஒருவனுக்குப் பிச்சை யெடுப்பதினு மேற் பட்டவிபத்துப் பிறிதொன்று மில்லையாம். மாபலிச்சக்ர வர்த்தியினிடத்து மூவடிமண் யாசிக்கச் சென்ற திரு மால்குறளாய் (இரண்டடியளவாய்)க் குறுகிவிட்டாரென் று நூல்கள் கூறுவதை நோக்கினால், யாசிப்பவர்க்குஅங்க முற்றுங் குறுகிவிடுகின்றதென்பது விளங்காதிராது. "பல்லெலாந் தெரியக் காட்டிப் பருவரல் முகத்திற் கூட் டிச், சொல்லெலாஞ் சொல்லி நாட்டித் துணைக்கரம் விரி த்து நீட்டி, மல்லெலா மகல வோட்டி மானமென் பதனை

விட்டி, இல்லெலா மிரத்த லந்தோ விழிவிழி வெந்த ஞான்றும்" என்று குசேலோபாக்கியானம் கூறுமாறு இரத்தல் இழிவாயவற்று ளெல்லாம் மிக இழிவாதலால், அதனினுமிக்க விபத்து மானமுடையார்க்குப் பிறிதொன்றுமில்லையாம். அத்தன்மையதாய விபத்து நேரிட்டகாலத்தும், செய்வனவற்றைச் செய்தொழுகுகின்றவர்தாம் "புலி பசித்தாலும் புல்லைத்தின்னாது" என்னும் பழமொழிக்கிலக்கிய மாவர்.

வறுமைமிக்குப் பிச்சையெடுக்கும் நிலைமையினைப் பெற்றவனை அவன்தாய் என்னசெய்கின்றாள்? பழிக்கின்றாள்; மனைவியோ கவனிப்பதில்லை; அவன் சொல்லுகின்றசொல் மதிப்பிற்குரியதாவதில்லை; அவனுக்கு அவமானம் அடிக்கடியுண்டாகின்றது; தீராத விசாரமோ அவனைவிட்டுத் தொலைவதில்லை; தைரியமென்பது அவனுக்குச் சற்றுமிலதாகின்றது; சபையிற் செல்வதற்கோ அவன் நாணமடைகின்றான்; செல்வரைக் கண்டவிடத்தோ அவன் தனது முன்னிலைமையைக் கருதித் தலை குனியு மியல்புடையவனாகின்றான்; ஆண்மையோ அவனிடத்துத் தங்க வஞ்சுகின்றது. இத்தன்மையவாய நிலைமையி லிருப்பவன் தான் செய்தற்குரிய காரியங்களை மறவாது பிச்சையெடுத்தேனும் பொறுமையோடு செய்து வருவானாயின், அவனது வாழ்க்கை பொன்மலர் நாற்றமுடைய தென்பது போலப் புகழ் பெறுவதற் குரியதாம்.

பொன்னையுருக்கிய விடத்து, அதன் குண மாறுகின்றதோ? பாலைக் காய்ச்சிய விடத்து அதன் சுவை கெடுகின்றதோ? சந்தனக்கட்டையைத்தேய்த்தவிடத்து அதன் மணம் குறைகின்றதோ? இல்லையன்றோ? இங்ஙனமே நல்லோர் தாம் வறுமை மிக்குப்பிச்சையெடுக்கும்

நிலைமை நேர்ந்தவிடத்தும், தமது இல்லறவொழுக்கத்திற்குரிய காரியங்களைச் செய்வதன்கண் மறப்பதில்லையாம். நீங்கள் எத்தன்மையதாய விபத்து நேர்ந்தவிடத்தும் செய்வனவற்றை மறவாது செய்வீராயின், புகழ்புண்ணியங்களைப் பெற்றுப் புனிதராவீரென்று நம் மனோர்க்கு வற்புறுத்தற் பொருட்டே ஔவைப்பிராட்டியார் "ஐயம்புகினுஞ் செய்வனசெய்" என்று திருவாய் மலர்ந்தருளினர். பிச்சை யேற்றல் துறவறத்தார்க்கு விதியாயும், இல்லறத்தார்க்கு விலக்காயுமிருத்தலின், "ஐயம்புகினுஞ் செய்வனசெய்" என்று ஔவையார் கூறியது இல்லறத்தாரை நோக்கியேயாமென் றிங்குணர்தல் வேண்டும்.



## 10. ஒருவனைப்பற்றி ஓரகத்திரு.

இல்வாழ்வார் எவ்வகையானும் மற்றவ ருதவியின்றித் தமது வாழ்க்கையை யினிதாக நடத்துவது கூடாமையின், அவர் மற்றவருதவியை வேண்டி வாழ்தற்குரியவராக விருக்கின்றனர். முக்காலி நாற்காலி யென்பன வற்றின்கணுள்ள கால்களுள் ஒவ்வொன்றும் மற்றக் கால்களின் உதவியைப் பெறுத விடத்து, நிலை பெறுவ தாமோ? மூன்று கால்களையுடையது முக்காலியாம்; நான்கு கால்களை யுடையது நாற்காலியாம். முக்காலியின் ஒவ்வொரு காலுக்கும் மற்றக் கால்களினுதவியும், நாற்காலியின் ஒவ்வொரு காலுக்கும் மற்றக் கால்களினுதவியும் அவசியமாக வேண்டு மென்பது அவற்றி னியல்பினை ஊகித்து நோக்கினல் நன்கு

விளங்குவதாம். இங்ஙனமே இல்வாழ்வாரும் வாழ்தற்குரியவராக விருக்கின்றனர். அண்டை வீட்டுக்காரர், எதிர் வீட்டுக்காரர் முதலாயினோரது உதவியைப் பெறுவதின்றி, எவ்வில்வாழ்வாராவது தமது வாழ்க்கையை யினிது நடத்துவதற்குரியவராவரோ? ஆகாரென்பது நிச்சயமேயாம். ஆகவே, இல்வாழ்வார் பிறருதவியைப் பெறுவதின்றி வாழ்வது கூடாமையின், அவரெந்நாளும் தமக்குதவி செய்தற் குரியாரைத் தமக்குச் சார்பாகக் கொண்டே வாழ்தற் குரியவராக விருக்கின்றாரென்பது மறுத்தற்கியலாத விஷயமாம்.

முற்றுந் துறந்த முனிவரும் பிறருதவியின்றித் தமது துறவற வொழுக்கத்தைக் கடைபோகச் செய்வது முடியாதாயின், இல்லறத்தார் எவ்வாறு பிறருதவியின்றி, தமது இல்லற வாழ்க்கையை யினிது நடத்துவதற் குரியவராவர்? ஆதலால், இல்லறத்தார் தமக்குத் துன்பம் நேர்ந்த விடத்துக் குறிப்பறிந் துதவித் தம்மைப் பாதுகாத்தற் குரியாரைத் துணையாகப் பற்றி வாழ்வது அவர்க்கு அவசியமான கடமையாம். முதற் பொருளில்லாது வர்த்தகஞ் செய்கின்றவர்க்கு அவ்வர்த்தகத்தால் தக்க இலாபமுண்டாவ தில்லையாமன்றோ? அங்ஙனமே தமக்குத் துன்பம் வந்தபோது, அதனைக் குறிப்பறிந்து நீக்கித் தம்மைக் காத்தற்குரியாரைத் துணையாகக்கொண்டு வாழாதவர்க்கு அவ்வாறு வாழ்வதால் இல்வாழ்க்கையில் நிலைபெற்றிருப்ப தில்லையாம். ஆதலால், இல்வாழ்வார் தம்மைத் தாங்க வல்லவரைத் துணையாகக்கொண்டு, அவர் சார்பில் வாழ்வதவசியமாம். ஒருவன், நல்வினையின் பயனும் தீவினையின் பயனுமில்லையென்பார், விடர், தூர்த்தர் முதலாயினோரைத் துணை

யாகக் கொண்டு அவர்களது சார்பில் வாழ விரும்புவா ராயின், அஃது எருமை வாலைப்பிடித்து ஏரியிலிறங்கு வது போலவாம். எருமை வாலைப் பிடித்து ஏரியிலிறங் கினவன் துன்புறுவதுபோலச் சமயத்தி லுதவிசெய்தற் குரியராகாரைத் துணையாகக் கொண்டவர் துன்புறுவது நிச்சயமேயாம்.

சலதாரை நீரானது சமுத்திரத்தைச் சார்ந்த போது, அது சலதாரை நீரென்னும் பெயரொழியப் பெற்றுச் சமுத்திர தீர்த்தமென்னும் பெயரைப் பெறு கின்றதன்றோ? அங்ஙனமே ஒருவர் அறிவொழுக்கங்க ளில்லாதவரா யிருப்பினும், அறிவொழுக்கங்களுடையா ரைத் தமக்குத்துணையாகக் கொண்டொழுகுவாராயின், அவர் அற்பரென்னும் பெயர் நீங்கப் பெற்று அறி வுடையா ரென்னும் பெயரைப் பெறுவது நிச்சயமாம். மேலும், அவர் பாலோடுகலந்த நீர் பாலாக விளங்குவது போல அறிவொழுக்க முடையாராகவும் விளங்குவர்; குற்றி (மரக்கட்டை)யைப் பற்றியிருக்கும் புல் உழவ ருழுபடையால் தீங்குறுவாறுபோலப் பிறரால் தீங்குறு வது மில்லையாம். ஈனரைத் துணையாகக் கொண்டு, அவர் சார்பிலிருப்பதொழிந்து, நல்லோரைத் துணையா கக் கொண்டு, அவர் சார்பிலிருக்கும் இல்வாழ்வார் நன் மையை யடைவதன்றித் தீமையை யடைவது சொப்ப னத்து மில்லையாம். காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம் (உலோபம்), மானம், உவகை, மதமென்னும் அறுவ கைக் குற்றங்களால் வரும் துன்பத்தை நீக்க விரும்பு கின்றவர் அவை யில்லாதவரைத் துணையாகக் கொண்டு, அவர் சார்பிலிருத்தல் வேண்டும். இச்சார்பில்லாதவர் இல்லற வாழ்க்கையைக் கடைபோக நடைபெறச் செய் வது எவ்வாற்றானு மில்லையாம்.

இல்வாழ்வார் தாம் தீயவற்றைச்செய்யும் போது, தாட்சண்ணியமில்லாது தமக்குக் கண்டித்துப் புத்தி சொல்லுவாரைத் துணையாகக்கொண்டு அவர் சார்போடு ஓரிடத்திலிருப்பாராயின், அவர்க்குப் பகைவர் செய்யுந் தீங்கு சிறிதுமில்லையாம். அறிவொழுக்கங்களால் மேம்பட்டு விளங்குகின்றவரைத் துணையாகக் கொண்டு, அவர் சார்போடு ஓரிடத்தில் வசிப்பவர்க்குப் பகைவரு மிருப்பரோ? இரான்றோ? பகைவரில்லாதவர்க்கு மக்கள் வாயிலாகத் தீமை யுண்டாவது எவ்வாறும்? ஒருவாற்றானுமில்லையாம். "இணக்கமறிந் திணங்கு" "சான்றோ ரினத்திரு" "பெரியாரைத்துணைக்கொள்" என்று ஆத்திசூடியிலருளிச் செய்த ஒளவைப்பிராட்டியார், அவற்றோடு நில்லாது, கொன்றை வேந்தனில் "ஒருவனைப்பற்றி யோரகத்திரு — நீ அறிவொழுக்கங்களால் மேம்பாடுடையா னொருவனைத் துணையாகக்கொண்டு, ஓரிடத்திருக்கக்கடவாய்" என்றும் திருவாய்மலர்ந்தருளி யிருப்பதனை நன்கு ஊகித்து நோக்கினால், அறிவொழுக்கங்களால் மேம்பாடுடையாரைத் துணையாகக்கொண்டு, அவர் சார்பு பற்றி ஓரிடத்தில் வசிப்பவர்க்கு நன்மையென்று சொல்லப்படுவனவெல்லாம் நன்றாகவுண்டாகு மென்பது நன்கு விளங்கு மன்றோ? இல்வாழ்வார்க்கு அண்டை வீட்டுக்காரர், எதிர் வீட்டுக்காரர் முதலாயினோரைத் துணையாகக்கொண்டு அவர்கள் சார்பில் வாழ்வது அவசியமாயினும், அவர்க்கு அறிவொழுக்கங்களால் மேம்பட்டவரது சார்பு மிகவும் அத்தியாவசியகமானதாம்; அவரைத் துணையாகக்கொண்டு, அவர் சார்பில் வசிப்பவர்க்கு யாவரது உதவியும் மிகு எளிதாகவுண்டாவதாம்.

மார்க்கண்டேய மகாமுனிவர் எமனைவென்று என்றும் பதினாறு வயதினராக விருக்க வரம் பெற்றதும், சுக்கிரீவன் வாலியின் பகையின்றி வாழ்ந்ததும், விபீஷணன் தன் பகைவன் மாள இலங்கைக்கிறைவனாயதும், பாண்டவர் தம் பகைவரை வென்று ஜயசீலராக விளங்கியதும் எதனாலென்று சீர் தூக்கிப் பார்ப்போமாயின், அஃது ஒருவனைப்பற்றி யோரகத்திருந்தமையே யாமெனப் பிறழாது விளங்கும். மார்க்கண்டேய மகாமுனிவர் பரமசிவனைத் துணையாகக் கொண்டு அவர் சார்பிலும், சுக்கிரீவனும் விபீஷணனும் சீராமரைத் துணையாகக்கொண்டு அவர் சார்பிலும், பாண்டவர் கண்ணபிரானைத் துணையாகக்கொண்டு அவர் சார்பிலுமிருந்தமையாற்றான் தமக்குநேரிட்ட துன்பமெல்லாமொழியப்பெற்றுச் சுகமாக வாழ்வாராயினர். நாமும் அறிவொழுக்கங்களால் மேம்பாடுடையாரைத் துணையாகக் கொள்ளுவதன்றிப் பிறரைத் துணையாகக்கொள்ளாது, அவர் சார்பிலிருந்து வருவோமாயின், எவர் பகையுமின்றி யினிதாக வாழ்தற்குரியவராவோம்; கடவுளருளைப் பெறுதற்கும் தகுதி யுடையவராவோம்.

"சந்தன விருட்சத்தை யண்டிநிற் கின்றபல
தருவுமவ் வாசனைதரும்,
தங்கமக மேருவை யடுத்திடுங் காக்கையுஞ்
சாயல்பொன் மயமேதரும்;
பந்திமிகு பாலுடன் விளாவியத ணீரெலாம்
பால்போ னிறங்கொடுக்கும்,
படிகமணி கட்குளே நிற்கின்ற வடமுமப்
படியே குணங்கொடுக்கும்;

அந்தமிகு மரகதக் கல்லைத் தரித்திடி
னடுத்ததும் பசுமையாகும்,
ஆனபெரி யோர்களொடு சகவாச மதுசெயின்
அவர்கள்குணம் வருமென்பர்காண்."

என்று குமரேச சதகங் கூறுவது இங்கு நன்குணர்தற் பாலதாம்.



## 11. ஓதலி னன்றே வேதியர்க் கொழுக்கம்.

ஒழுக்கமென்பது உயர்ந்தா ரிழிந்தாரென்னும் இருதிறத்தார்க்கும் சிறப்பினைத் தருவதாக விருத்தலின், அதனை ஒவ்வொருவரும் தம்முயிரினும் சிறந்ததாகப் பாதுகாத்து வருதல்வேண்டும்; பாதுகாத்து வருவதில் அவர் பராமுகமா யிருப்பாராயின், இழிந்த நிலைமையையடைவது நிச்சயமாம். எல்லாப்பொருளினும் சிறந்தது யாதென நன்குவிசாரித்து நோக்குவோமாயின், அஃது உயிராமென்பது நன்றாக விளங்குவதாம்; அத்தன்மையதாய உயிரும் ஒழுக்கம்போலச் சிறப்பினைத்தருவதின்மையின், உயிரைப்பார்க்கிலும் ஒழுக்கம் சிறப்புடையதாக விருக்கின்றது. ஒழுக்க மில்லாதவர் உயர்குலத்திற் பிறந்தவரா யிருப்பினும், அவர் இழிகுலத்தாரே யாவர்; ஒழுக்க முடையவர் இழிகுலத்தில் பிறந்தவரா யிருப்பினும், அவர் உயர்குலத்தா ராவரென்பதனை நன்கு சிந்தனைசெய்து வருகின்றவர் ஒழுக்கத்தினைத் தம்முயிரினும் சிறப்புடையதாகப் பாதுகாத்து வருவரென்பது ஒருதலையாம். ஒருதலை-நிச்சயம்.

ஒழுக்கமாவது அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரிய முதலிய நிலை (ஆசிரமங்) களினின்று அவற்றிற்கோதிய அறங்களில் தவறு தொழுகுதலாம். அறநூல்கள் சொல்லியவற்றுள். இக்காலத்திற்குப் பொருந்தாதனவற்றையொழித்துசொல்லாதனவற்றுள் பொருந்துவனவற்றைக் கொண்டு ஒழுகுதலே இங்கு முக்கியமாக ஒழுக்கமாம். உயர்ந்தோர் பலரும் ஒழுகியவாற்று லொழுகுவதாகிய ஒழுக்கம் அறிவில்லாதவரிடத்து நிலைபெறுவதில்லையாம்; அவ்வறிவோ கல்வியில்லாதவரிடத்து நிலைபெறுவதில்லையாம். ஆகவே, கல்வியும், அதன்பயனுய அறிவு முடையவரான்றி, மற்றவர் ஒழுக்கமுடையவரா யிருப்பரென்பது பேச்சுமாத்திரமாம். இதனால், நாம் ஒழுக்க முடையவர் அறிவும் அதற்கேதுவாய கல்வியு முடையாரென்றும், ஒழுக்க மில்லாதவர் அவ்விரண்டு மில்லாதாரென்றும் நிச்சயமாக அறியலாம். கல்வியையும் அதன் பயனுகிய அறிவையும் பெறாதவர் ஒழுக்கமுடையவரா யொழுகி உயர் நிலையினையடைவது ஒரு வாற்றானு மில்லையாம். ஒழுக்கம் யாரிடத்து நிலைபெற்று வருகின்றதென்று சிறிதூகித்து நோக்கினுல், அது மன மொழி மெய்கள் தீயவழியிற் செல்லாதடங்குத லுடையவ ரிடத்தன்றி மற்றவரிடத்து நிலைபெற்று வருவதில்லையாமென்பது விளங்குவதாம். ஒழுக்கத்தால் மேம்பாடடைய விரும்புகின்றவர் கல்வியையும் அதனுலாய அறிவையு முடையவராக விருக்க விரும்புவதோடு மனம் வாக்குக் காயமென்னும் திரிகரண அடக்கமு முடையவராக விருத்தல் வேண்டும். இவ்வடக்கமுள்ள விடத்து ஒழுக்கம் பொன்மலர் நாற்றமுடைத்து என்பது போலச் சிறந்து விளங்குவதாம்.

உலகத்தோடு பொருந்த நடத்தலென்னும் ஒழுக்கம் (1) நன்றியறிதல், (2) பொறையுடைமை, (3) இன்சொல், (4) இன்னா செய்யாமை, (5) கல்வி, (6) ஒப்புரவறிதல், (7) அறிவுடைமை, (8) நல்லினத்தாரோடு நட்புச்செய்தல் என்னும் எட்டுமில்லாத விடத்துத் தோன்றுததாக விருத்தலின், இவ்வெட்டும் அதற்குக்காரணமாயிருக்கின்றன. அவற்றை யுடையவர் ஒழுக்கமுடையவராக விருத்தல் தவறுவதில்லையாம்.

(1) நன்றியறிதலாவது பிறர் செய்த உதவியை மறவாதிருத்தலாம்.

(2) பொறையுடைமையாவது பிறர் செய்த தீமையைப் பொறுத்துக் கொள்ளுதலாம்.

(3) இன்சொல்லாவது வஞ்சகமின்றி யாவரிடத்தும் இனியசொற்களைச் சொல்லுதலாம்.

(4) இன்னா செய்யாமையாவது பயனை நோக்கியாவது கோபத்தாலாவது சோர்வாலாவது பிராணிகளுக்குத் தீமை செய்யாமையாம்.

(5) கல்வியாவது அறம் பொரு ளின்பம் வீடென்னும் உறுதிப்பொருள்களை யுணர்த்தும் நூல்களைக் கற்றலாம்.

(6) ஒப்புரவறிதலாவது உலகநடையினை யறிந்து உபகாரஞ் செய்தலாம்.

(7) அறிவுடைமையாவது கல்வி கேள்விகளாலாய அறிவோடு உண்மை யறிவை யுடைத்தாயிருத்தலாம்.

(8) நல்லினத்தாரோடு நட்புச் செய்தலாவது தீநெறியிற் செல்வதொழித்து நன்னெறியிற் செலுத்தும் பேரறிவுடையவரோடு நட்புச்செய்தலாம்.

இவ்வெட்டு முடையவர் ஒழுக்கமுடையவரா யிருத்தல் தவறுவதின்மையின், இவ்வெட்டினையுமுடையராக விருக்க ஒவ்வொருவரும் முயலுதல் வேண்டும்; முயன்றால், அவர் ஒழுக்கத்தால் மேம்பட்டு விளங்குதல் பிறழாததாம்.

வருணம் குடிமை யென்பனவற்றுள், குடிமையே சிறப்புடையதாம். குடிமை யில்லாதவர் வருணத்தால் சிறப்படைவதில்லையாம். வருணமாவது பிரஹ்ம க்ஷத்திரிய முதலிய சாதியாம்; குடிமையாவது உயர்ந்த குலத்தில் பிறந்திருத்தலாம்; அஃதாவது வம்ச பரம்பரை பிறழாதிருப்பதாம்.

ஒழுக்கம், உண்மையுரைத்தல், பழிபாவங்களுக்கேதுவாய செயல்களைச்செய்வதற்கு நாணுதல் என்பன முறையே உடம்பிலும் வாக்கிலும் மனத்திலும் நிகழுவனவாக விருத்தலை யுன்றி நோக்குவோர்க்கு ஒழுக்கமுடையவர் உண்மையுரைத்தலையும் பழிபாவங்களுக்கேதுவாய செயல்களைச் செய்வதற்கு நாணுதலையுமுடையராக விருப்பாரென்பது நன்கு விளங்குவதாம்.

திரிசங்கு மகாராஜன் தீயொழுக்கத்தை மேற்கொண்டமையால் புலையனானான்; கௌசிக ராஜன் (விசுவாமித்திரன்) நல்லொழுக்கத்தை மேற்கொண்டமையால் பிராமணனானானென்று புராணங்கள் கூறுவதை நம்மனோர் நன்கு சிந்தித்து நோக்குதல்வேண்டும். இவற்றைச் சிந்தித்து நோக்குவோர்க்கு ஒழுக்கத்திற் றவறுவோர் இழிகுலத்தாராவர்; தவறாதிருப்போர் உயர்குலத்தாராவரென்பது நன்கு விளங்கும்.

"ஓதலி னன்றே வேதியர்க் கொழுக்கம்=பிராமணர்க்கு ஒழுக்கமானது வேதமோதுதலினும் சிறப்புடையதாம்" என்று ஔவைப் பிராட்டியார் அருளிச்

செய்திருப்பது யாதுணர்த்துகின்றது? தமக்குரிய ஒழுக்கங்கெடுமாறு நடப்பவர் கீழ்மக்களாய் விடுவரென்பதையன்றோ உணர்த்துகின்றது? ஒருவர் சாதியால் பெரியவராகார்; ஒழுக்கத்தாலேயே பெரியவ ராவரென்பதனை நம்மனோர்க் கறிவுறுத்தவே, ஔவைப்பிராட்டியார் "ஓதலி னன்றே வேதியர்க் கொழுக்கம்" என்றருளிச்செய்தனர்.

தத்தமக்குரிய ஒழுக்கங்களினின்றும் தவறாதொழுகுகின்றவர் நற்குடிப்பிறப்பு, தீர்க்காயுள், ஐசுவரியம், அழகு, காணியாட்சி, சொற்செலவு, வித்தை, நோயின்மையென்னும் எட்டுவகைப் பயன்களையும் தவறாதடைவரென்று அறநூல் கூறுகின்றது. இது

"பிறப்பு நெடுவாழ்க்கை செல்வம் வனப்பு
நிலக்கிழமை மீக்கூற்றங் கல்விநோ யின்மை
இலக்கணத்தா லிவ்வெட்டு மெய்துப வென்றும்
ஒழுக்கம் பிழையா தவர்" என்று

ஆசாரக்கோவை கூறுவதால் நன்கு விளங்கும். நம்மனோர் தத்தமக்குரிய ஒழுக்கங்களிற் றவறா தொழுகி வருவாராயின், நற்குடிப்பிறப்பு முதலியவற்றைப் பெறுவதுடன், காலக்கிரமத்தில் எல்லாம் வல்ல இறைவனருளுக்கும் பாத்திரராய் மாறுவதில்லாத இன்பநிலையினை யடைவரென்பது நிச்சயமாம்.

ஒழுக்கமென்பது பார்ப்பார்க்கேயுரியது, மற்றவர்க்குரியதன்றென்று சிலர்கருதி, ஒழுக்கமுடையரா யிருப்பதொழிந்து, இழுக்குடையவராய் நடந்து வருகின்றனர்; அவ்வாறு நடந்துவருவது பெரும் பாவச்செயலாம். (1) பிறர்மனைவியரை விரும்புதல், (2) கள்ளுண்டல், (3) பிறர்பொருளை யபகரித்தல், (4) சூதாடல், (5) பிராணிகளைக் கொல்லுதல் என்பனவற்றைச் செய்யா

திருப்பவர் யாவராயிருப்பினும், அவர் ஒழுக்கமுடையவ ராவர்; இவ்வைந்தனுள் எதனையேனுஞ் செய்துவருபவர் ஒழுக்கமில்லாதவ ராவரென்பதனை நன்குணருதல் வேண்டும். இவ்வைந்து குற்றச் செயல்களுள் ஒன் றேனு மில்லாதிருப்பவரே ஒழுக்கமுடையாராவரென் பது உணரப்படுமாயின், ஒழுக்கமென்பது பார்ப்பார்க் கே யுரியது, மற்றவர்க்குரிய தன்றெனக் கருதுவது பிறழ்வான கொள்கையாமென்பது நன்கு விளங்கும்.

ஒழுக்கமில்லாதவர் உயர்வை யெய்துதல் ஒருவாற் றானும் அமையாததாக விருத்தலின், உலகத்தோடொ த்து நடத்தலாகிய ஒழுக்கத்தினின்றும் பிறழாது வர நாம் இனியேனும் முயன்று மேன்மையடைவோமாக.

"மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான், பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்=கற்றவேதத்தினை மறந்தானாயினும் அவ்வருணங்கெடாமையிற் பின்னும் அஃதோதிக்கொள்ளலாம்; அந்தணனது உயர்ந்த வரு ணம் தன்னொழுக்கங் குன்றக் கெடும்" என்று திருக் குறள் கூறுவது இங்கு நன்குணர்தற் பாலதாம்.



## 12. ஔவியம் பேசாத லாக்கத்திற் கழிவு.

---

பொறாமையென்பது தன்னையுடையவன் மேன் மேலுயர்தலை யடையாவாறு இம்மை மறுமை யென்னு மிருமையிலும் அவனைக்கெடுப்பதாக விருத்தலின், பிறரது ஆக்கத்தைக்கண்டு பொறாமையடைந்து பேசு வது எவர்க்குந் தகுதியுடைய தன்றாம். "கூறிடுங் கொடிய காமங் குரோதமே யுலோப மோகம், பாறிய

மதங்க ளேமாற் சரியமுட் பகையா றென்ப" என்று சூடாமணி நிகண்டு கூறுகின்றவாறு, காமம் (ஆசை), குரோதம் (கோபம்), உலோபம் (ஈயாமை), மோகம் (விபரீதவுணர்ச்சி), மதம் (கர்வம்), மாற்சரியம் (பொறாமை) என்னும் பகைவர்க்க மாறனுள் பொறாமை யென்பதும் ஒன்றாக விருத்தலின், அதனைப் பிரயத்தன பூர்வகமாக ஒழிப்பது ஒவ்வொருவர்க்கும் இன்றி யமையாத கடமையாம். பிறரது ஆக்கத்தைக்கண்டு பொறாமை யடைந்து பேசாதவர், காமக் குரோத முதலியவற்றை யெல்லா மொழித்தவ ராவரென்பதை யுணர்த்துதற் பொருட்டே மேற்படி நிகண்டு மாற்சரிய மென்னும் பொறாமைக் குணத்தை யிறுதியில் வைத்துக் கூறியது. எவரிடத்துப் பிறரது ஆக்கத்தைக் கண்டு பொறாமை யடைந்து பேசுவதில்லையோ அவரிடத்துக் காம முதலிய தீயகுணங்களுள் ஒன்றுமில்லையா மென்று ஒரு தலையாக உணரலாம். ஒருதலை - நிச்சயம்.

ஆக்கமாவது ஒருவர் செல்வம், கல்வி, அறிவு, ஆண்மை, குடிப்பிறப்பு முதலியவற்றால் மேன்மே லுயர்தலாம். பிறர் செல்வம் கல்வி முதலிய வற்றால் மேன்மே லுயர்தலைக்கண்டு பொறாமை யடைந்து பேசுபவர் இம்மைப் பயனையும் மறுமைப் பயனையு மிழந்து வருந்துவது தவறாத விஷயமாம். "அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத், தீயுழி யுய்த்து விடும் = அழுக்காறு (பொறாமை) என்று சொல்லப்பட்ட ஒப்பில்லாத பாவி தன்னை யுடையானை இம்மைக்கட் செல்வத்தைக்கெடுத்து, மறுமைக்கண் நரகத்திற் செலுத்தி விடும்" என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார் திருவாய் மலர்ந்தருளியிருப்பதனை நன்குணர்ந்து நோக்குவோர்க்குப் பிறரது ஆக்கத்தைக்கண்டு பொறாமை

யடைந்து பேசுவோர் இம்மைக்கண் (இப்பிறப்பில்) தரித்திரத்தையும் மறுமைக்கண் (இறந்த பின்னர்) நரகத்தையும் அடைந்து தீராததுக்கத்திற்கு ஆளாய் வருந்த முறுவரென்பது செவ்வையாக விளங்குமன்றோ? பிறரது ஆக்கத்தைக்கண்டு பொறாமையடைந்து பேசுவது துன்பத்தையே தருவதாக விருத்தலின், அவ்வாறு பேசாதிருப்பதே அறிவுடையார்க் கழகாவதாம். செல்வம் கல்வி முதலியவற்றை யுடையாரைக் கண்டவிடத்து மனஞ்சகியாது வெறுத்துப் பேசுவது எதனாலென்று சிறிது சீர்தூக்கி நோக்குவோமாயின், அது பொறாமைக் குணத்தாலென்பது நன்கு விளங்குவதாம். அவ்வாறுபேசுபவர்க்கு இம்மைப் பயனாகிய புகழும், மறுமைப்பயனாகிய புண்ணியலோகப் பிராப்தியும் ஒரு வாற்றானும் சம்பவியா வாகலின், புகழையும் புண்ணியலோகப் பிராப்தியையும் பெற விரும்புவோர் ஔவியம் பேசுதலை அத்தியாவசியகமாக விட்டொழிதல் வேண்டும்.

"ஔவியம் பேசுத லாக்கத்திற் கழிவு:—பிறரது ஆக்கத்தைக்கண்டு † பொறாமைச்சொற்களைப் பேசுவது (தன்னைப்பேசுவோனது) ஆக்கத்திற்கு அழிவைத்தருவதாம்" என்று நமது ஞானத்தாயாகிய ஔவைப் பிராட்டியார் திருவாய் மலர்ந்தருளியிருப்பது பொறாமைச் சொற்களைப் பேசுபவனுக்கு அதனால் அவன் மேன்மேலுயர்தற்குக் காரணமாகிய செல்வம் கல்வி முதலியன வெல்லாம் அழிந்துபோ மென்பதனையன்றோ உணர்த்து கின்றது? தனதாக்கத்தை யழித்தற் கேது

† பொறாமைச் சொற்கள் - மனத்திலுள்ள பொறாமையை அறிவிக்கும் சொற்கள்.

வாயுள்ள பொருமைச் சொற்களைப் பேசுகின்றவன் பிறர்க்கா விரோதியாகின்றான்? தனக்குத்தானே விரோதியாகின்றான்? தனது மேன்மை யழிதற் கேதுவாகிய செயல்களைச் செய்பவனை அறிவுடையார் விவேகி யென்று கூறுவரோ? என்ன வென்று கூறுவர்? அவிவேகி அல்லது மூடன் அல்லது பேதை யென்றன்றோ கூறுவர்?

பழிபாவங்கட் கேதுவாய செயல்களைச் செய்வதற்கு நாணமுறாமை, செய்யுங் காரியமிது தவிருங் காரியமிது என்றுணராமை, முகங்கொடுத்துப் பேசாமை, செல்வம் கல்வி குடிப்பிறப்பு முதலியவற்றைப் பாதுகாவாமை யென்பன யாரிடத் திருக்கின்றன வென்று சிறிதூகித்து நோக்குவோமாயின், அவை பொருமைச் சொற்களைச் சொல்லுகின்றவ ரிடத்தன்றி மற்றவரிடத்தில்லையாமென்பது நன்கு விளங்கும். பொருமைச் சொற்களைப் பேசுவது துன்பங்கள் அடுக்கடுக்காக வருவதற்குக் காரணமாயிருத்தலின், அதனைப் பிரயத்ன பூர்வகமாக விட்டொழிப்பது நம்மனோர்க்கு அத்தியாவசியகமான கடமையாம். ஒளவையார் ஆத்திசூடியில் "ஒளவியம் பேசேல் - (நீ யெப்போதும்) பொருமைச்சொற்களைப் பேசாதிருக்கக்கடவாய்" என்று கூறியதனோ டமையாது, கொன்றை வேந்தனில் 'ஒளவியம் பேசுத லாக்கத்திற் கழிவு' என்றும் கூறியிருப்பதை நன்கூகித்து நோக்குவோமாயின், அது பொருமைச் சொற்களைப் பேசாதிருப்பது ஒவ்வொருவர்க்கும் இன்றியமையாத கடமையா மென்பதை வற்புறுத்துவதாமன்றோ? இவ்வாறு ஒளவைப்பிராட்டியார் வற்புறுத்திக் கூறியிருப்பதை நம்மனோர் கவனியாதிருப்பது நமக்கும் நம்மைச் சேர்ந்தவர்க்கும் பெருங் கே

டை விளைப்பதாக விருக்கின்றது. அக்கேடொழிய வேண்டுமாயின், நம்மனோர் பொறாமைச் சொற்களை மறந்தும் பேசாதிருக்க முயன்று வருதல் வேண்டும்.

சிசுபாலன் எதனால் நாசமானான்? துரியோதனன் எதனாலழிந்தான்? பொறாமையினாலன்றோ? பொறாமை தன்னையுடையவரையும், அவரைச் சேர்ந்தவரையும் அழிப்பதாக விருத்தலின், பொறாமைச் சொற்களைப் பேசுவதைக் கவனமாக விட்டொழித்து வருதல் நம்மனோர்க்கு அத்தியாவசியகமானதாம். சிசுபாலன் தருமபுத்திரர் தாம் செய்த ராஜசூய யாகத்தில் கண்ணபிரானுக்கு அக்கிரபூசை செய்ததைப் பொறாது இகழ்ந்துபேசினமையால் நாசமடைந்தானென்பதும், துரியோதனன் பாண்டவர்மீது கொண்ட பொறாமையால் அழிந்தானென்பதும் (பாரதத்தில்) மிகு பிரசித்தமானன்றோ? ஆகையால், பொறாமைச் சொற்களைப் பேசுவது பொல்லாதனவற்றுளெல்லாம் மிகு பொல்லாததாமென்றுணர்ந்து, அதனைப் பையப் பைய இனியாவது விட முயலுதல் வேண்டும்.

பிறர் செல்வம் கல்வி முதலியவற்றால் மேன்மேலுயர்தலைக் கண்டுமகிழ்வது அறிவுடையார்க்குப் பேரணிகலமாம்; அஃதில்லாதவர்க்கே பொறாமையுண்டாகின்றது; அதனால் எனக்குள்ள செல்வம் கல்விமுதலியனபோலப் பிறர்க்குண்டாகலாமா என்னும் அசூயையுண்டாகின்றது; அதனால் அவரைக்கெடுக்க வேண்டுமென்னும் வயிரமுண்டாகின்றது; அதனால் அவரையிகழ்ந்து கூறுதல் முதலிய அக்கிரமச் செயல்களைச் செய்தல் சம்பவிக்கின்றது என்று நன்குணர்வோமாயின், பொறாமைக் குணத்தை யொழிக்கப் பெரிதும்

முயற்சி செய்வோம். "போது மென்ற மனமே பொன் செய்யு மருந்து" என்னும் பழமொழிக்கு நாம் இலக்கியமாக நிற்போமாயின், பொறாமைக்குணத்தை மிகு எளிதாகவொழித்தற் குரியவராவோம். பிறர் சென்ற பிறப்பில் நல்வினைகளை நன்றாகச் செய்தனர்; அதனாலவர் செல்வம் கல்வி முதலிய வற்றால் மேன்மேலுயர்ந்து வருகின்றனர்; நாமும் இப்பிறப்பில் நல்வினைகளைச் செய்து வருவோமாயின், அவ்வாறு உயர்ந்து வரலாமென்று கருதி ஔவியம்பேசாது நல்வினைகளைச் செய்து வருவோமாயின், நாம் ஆக்க முடையவராதல் நிச்சயமாம்.

"அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம், பேணா தழுக்கறுப் பான்=மறுமைக்கும் இம்மைக்கும் அறமுஞ் செல்வமுமாகிய உறுப்புக்களைத் தனக்கு வேண்டாதானென்று சொல்லப்படுவான் பிறன் செல்வங் கண்டவழி அதற்கு உவவாது (மகிழாது) அழுக்காற்றை(பொறாமைப்படுதலை)ச் செய்வான்"

என்று திருக்குறள் கூறுவது இங்கு நன்குணர்தற் பாலதாம்.



## 13. அச்சமுங் காசுஞ் சிக்கெனத் தேடு.

மக்கள் பசி, நோய், குளிர் முதலியவற்றால் வருத்தமுறாது வாழ்வதற்குரியனவா யிருப்பன தானியமும் பொருளுமாம். நெல் கேழ்வரகு முதலிய தானியங்களைப் பெறாதவிடத்து மக்கள் பசியால் வருந்தி மாள்வது நிச்சயமாம். பொருளில்லாவிடத்து நம்மே

நட்பினர், பகைவர், அயலாரென்னும் முத்திறத்தாரா லும் இகழப்படுதல் பிறழாததாம். பசியை யொழி த்துக் கொள்வதற்கு நெல் கேழ்வரகு முதலிய தானி யங்களும், நோய் குளிர் முதலியவற்றை யொழித்துக் கொள்வதற்குப் பொருளும் இன்றியமையாது வேண்டு வனவாயிருத்தலின், அவ்விரண்டனையும் இல்வாழ்வார் விரைவாகத்தேடிச் சேர்த்துவைத்துக் கொள்ளல் வேண்டும். இல்வாழ்வார்: பிரமசாரி, வானப்பிரஸ்தன், சந்நியாசி, ஆதாரமானவரால் விடப்பட்டவர், வறுமை யுடையார், ஒருவருமின்றித் தம்மிடத்து வந்திறந்தவர், பிதிரர், கடவுளர், விருந்தினர், உறவினரென்னும் பதின்மர்க்கும் தமக்குள்ள உணவையும் பொருளையும் பகுத்துக்கொடுக்க வேண்டியவராக விருத்தலின், அவ ர்கள் மறவாது தமக்கும் பிறர்க்கும் உதவியாதற்குரிய தானியத்தையும் பொருளையும் வருந்தியுழைத்து விரை வாகச் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்பது சொல்லா மலே விளங்குவதாம்.

தானியமென்பது தானியமேயன்றித் தானியம் விளைதற்குரிய நிலத்தையும், பொருளென்பது பொரு ளேயன்றிப் பொருள் கொண்டு வாங்குவனவாய உடை, உறையுள் முதலியவற்றையும் உணர்த்துவனவாம். இவ ற்றைப் பழிபாவங்களுக்குப் பயந்து முதுமைப்பருவம் வந்து துன்புறுத்துவதற்கு முன்னே சேர்த்து வைத் துக்கொள்பவர் முதுமைப் பருவத்தில் பசி, நோய், குளிர் முதலியவற்றால் வருந்துவது பெரும்பான்மையு மில்லையாம்.

இளமைப் பருவத்தில் இல்லறத்திற்கு இன்றிய மையாது வேண்டுவனவாகிய நெல்முதலியன விளைதற்

10

குரிய நிலத்தையும், பொருளையும் தமது முயற்சியால் தேடியவர் தாமிறக்குமளவும் வறுமைக்கிடமாய் வாழ்வ தின்மையின், இல்வாழ்வார் தமதில்லற வொழுக்கத் தைக் கடைபோகச் செய்தற்பொருட்டும், தாமிறக்கு மளவும் வறுமைக்கிடமாகாது வாழ்தற்பொருட்டும் அவ்வப்போது வேண்டிய தானியங்களையும், எப்போ தும் உடை முதலியன வாங்குவதற்குரிய.காயுள்ள பொருளையும், விரைவாகத் தேடுவதவசியமாமன்றோ? முதுமைப்பருவம் விரைந்துவந்து தேகவன்மையைக் குறைத்து எந்தத்தொழிலையும் செய்வதற்கு ஆற்றலில் லாதவராக நம்மை யாக்கிவிடுமென்பதை யடிக்கடி சிந் தனைசெய்து வருபவர் என்ன செய்வர் ? முதுமைப்பரு வத்தில் தாம் வருத்தமுறாதிருத்தற் பொருட்டு உண விற்குரிய தானியம் விளையும் நிலத்தையும், அவ்வப் போது உடை முதலியன வாங்குவதற்குரிய பொருளை யும், விரைந்து தேடுவரன்றோ? இவற்றை விரைந்து தேடுகின்றவர் தமக்கேயன்றிப் பிறர்க்கும் பயனுடைய வராயிருப்பர். தானியத்தையும் பொருளையும் தமக் கே பயனுமாறு சேர்ப்பவர் அவற்றின் பயனை முற்று மடைவது கூடாமையின், அவற்றைத் தமக்கும் பிற ர்க்கும் பயனுமாறு சேர்க்க நம்மனோர் முயலுதல் வேண்டும்.

தானியத்தையும், பொருளையுஞ் சேர்க்கும் வகை யில் வெயில் மழை பனி யென்பனவற்றை நோக்கிப் பின்னர்ப் பார்த்துக் கொள்ளுவோமென்று ஒருபோ தும் சோம்பியிருப்பது கூடாது. சோம்பலை யொழித் துத் தானியத்தையும் பொருளையும் தேடிவருபவர் தம் மை யுயர்த்துவதேயன்றித் தங்குடியிற் பிறந்தாரை யும் உயர்த்துகின்றவ ராகின்றனர். முதுமைப்பருவம்

வருவதற்குமுன்னே அத்தியாவசியகமாகத் தேட வேண்டுவனவற்றைத் தேடியவர் எந்நலத்தினைப் பெறு தொழிவர்? அவர் நலங்களெல்லாவற்றையும் பெறுவா ரென்பதற்கு ஐயப்பாடுமுண்டோ? தானியத்தையோ, அதுவிளையும் நிலத்தையோ, பொருளையோ, அஃதெப் போதும் வருதற்குரிய வழியையோ பெற எப்போதும் முயன்றுவருதல் வேண்டும். "முயற்சி திருவினை யாக் கும்—முயற்சி செல்வத்தினை வளர்க்கும்" ஆதலால், முயற்சியுடையவர் தன தானியங்களை யுடைவதில் குறைவுடையவராவ தில்லையாம்.

தனம் தானியம் என்னுமிரண்டனுள் மக்களுக்கு மிக அவசியமாயிருப்பது தானியமேயாகலின், அதனை வேண்டுமளவாக அவ்வப்போது சேர்த்துவைத்துக் கொள்ளுதல் வேண்டும்; கூடுமாயின், தானியம் விளை தற்குரிய நிலத்தையும் தேடுதல் நன்றும்; அதன்பின் னர்ப் பொருளைத்தேடி வேண்டுமளவிற்குச் சேர்த்து வைத்துக்கொள்ளல் வேண்டும்; பொருளைத் தேடும் போது வீண் செலவு செய்யாதிருத்தல்வேண்டும். பொ ருளைத் தேடும்போது அதனைப் பாதுகாவாது அசட் டை செய்துவருபவன் முதுமைப்பருவத்தில் வறுமை க்கு வாய்ப்பான தோழுவது திண்ணமாம்.

மக்கள் முதுமைப்பருவம் வருவதற்கு முன்னே பழிபாவங்களுக்குப் பயந்து, தனதானியங்களைச் சோம் பலை யொழித்துத் தேடி, அவற்றை வீண்செலவுசெய் யா திருப்பாராயின், அவர்கள் எல்லா நலங்களையும் பெறுதற்குரியவராவ ரென்பது தோன்றவே, நமது ஞானத்தாயாராகிய ஔவைப்பிராட்டியார் ஆத்திசூடி யில் "அக்கஞ் சுருக்கேல்", "பருவத்தே பயிர்செய்",

"நெற்பயிர் விளை", "பூமி திருத்தியுண்", "பொருடனைப் போற்றிவாழ்" என்றருளிச் செய்ததனேடமையாது கொன்றைவேந்தனில் "† அக்கமுங் காசுஞ் சிக்கெனத்தேடு=நீ தானியத்தையும் பொருளையும் விரைவாகத் தேடக்கடவாய்" என்றுமருளிச் செய்தனர்.

பொருளிருக்குமாயின், எதுதான் முடியாது? முன்னர்த் தானியத்தைக் கூறுவானேனென்று ஆசங்கித்தல்கூடும். ஒருவன் தன்வீடு நிறையப் பொருளைச் சேர்த்துவைத் திருப்பானுயின், அதனலவன் பசிப்பிணி யொழிவதாமோ? துன்பந்தருவனவற்றுள் பசிப்பிணிக்கு ஒத்ததேனும் உயர்ந்ததேனுமின்மையின், அதனை யொழித்தற்குரிய தானியத்தை யத்தியாவசியகமாகத் தேடுதல் வேண்டுமென்று வற்புறுத்தவே, நமது ஞானத்தாயார் தானியம் என்னும் பொருள் தரும் பதத்தை முன்னர்வைத்து 'அக்கமுங் காசுஞ் சிக்கெனத் தேடு' என்றருளிச் செய்தனர்.

"அக்கமுங் காசுஞ் சிக்கெனத் தேடு"ம் முயற்சியுடையவர் "மேழிச் செல்வங் கோழை படாது=ஏர்பிடித்துழுதலாலுண்டாகின்ற செல்வம் ஒருபோதுந் தாழ்வடையாது" என்று ஔவைப் பிராட்டியார் அருளியிருப்பதனையும் உட்கொண்டு, தாமுழுது பயிர் செய்

---

† அக்கமும்-சுற்றத்தாரையும், காசும் - (அவரை யுபசரித்தற் கேதுவாய) பொருளையும், சிக்கென - விரைவாக, தேடு - (நீ) தேடக்கடவாய் என்றிதற்குப் பொருள் கூறுவாருமுண்டு. அறிவு நூலார், அக்கமும் - தத்துவ ஞானத்தையும், காசும் - (அதன் பயனுயபொன்றுப்) பொருளையும், சிக்கென - விரைவாக, அஃதாவது முப்பது வயது முடிவதற்குள், தேடு-(நீ) தேடக்கடவாய் என்றிதற்குப் பொருள் கூறுகின்றனர். பொன்றுப்பொருள் - மோட்சம்.

தலையோ பிறரைக்கொண் டுழுவித்துப் பயிர் செய் தலையோ மேற்கொண் டொழுகுவாராயின், அவரிடத் துப் பொருள் தானே வழிகேட்டுவந்து சேர்வதாம். பொருள் சேர்ப்பதற்குரிய சாதனங்களுள் உழுது அல் லது உழுவித்துப் பயிர்செய்தல் தலையாயதாயிருத்த லின், அதனை மேற்கொண் டொழுகுதல் ஒவ்வொரு வர்க்கும் முக்கியமாய கடமையாம். இத்தொழில் செவ் வையாக நடைபெறாதவிடத்து மற்றத்தொழில்களுள் எதுவும் செவ்வையாக நடைபெறாததாம்.

"உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்றா, தெழு வாரை யெல்லாம் பொறுத்து=அவ்வுழுதலைச்செய்ய மாட்டாது பிற தொழிற்கண்மேற் செல்வார்யாவரை யுந் தாங்குதலால், அதுவல்லார் உலகத்தாராகிய தேர் க்கு அச்சாணியாவர்" என்று திருக்குறள் கூறுகின்ற மையைநோக்கின், உலகத்தார் நிலைபெற்று வாழ்வதற் குக்காரணமாயிருப்பவர் உழுது பயிர்செய்து தானியத் தைச் சேர்த்துவைத் திருப்பவராவ ரென்பது நன்கு விளங்குதலின், தானிய முடையவரே பொருளுடைய வராய் வாழுவரென்பதாம்.

(பொருள்) இல்லென இரப்போர், இடனின்று (ஆதாரமில்லாது) இரப்போர், (உள்ளபொருள்) தொலை வாகி யிரப்போர் என்று இரப்போர் முத்திறத்தினரா யிருப்பதற்குக் காரணம் யாது? அஃது அன்னார் அக்க முங் காசுஞ் சிக்கெனத்தேடாது சோம்பியிருந்தமையே யாம். ஒவ்வொருவரும் அக்கமுங் காசுந் தேடுவதில் பெருமுயற்சியுடையவரா யிருப்பாராயின், எவரும் †நல்குரவுடையவராய் நடுங்குவதில்லையாம். நல்குரவுண்

† நல்குரவு—தரித்திரம்.

டாகும்போது, செல்வர் கடைநோக்கிச் சேறற்றுன்பம், அவரைக் காண்டற்றுன்பம், கண்டால் மறுத்துழி நிகழுந்துன்பம், மறுவழியும் அவர் கொடுத்தது வாங்கற்றுன்பம், அது கொடுவந்து ‡ நுகர்வன கூட்டற்றுன்பம் முதலாயின நாள்தோறும் வேறுவேறாக வருவனவாயிருத்தலின், அவை யுண்டாகாவாறு அக்கமும்காசுஞ் சிக்கெனத்தேடி வாழுதலே அறிவுடையார்க் கழகாம்.

“† பொன்னொடு மணியுண் டாயின் புலையனுங் கிளைஞ னென்று, தன்னையும் புகழ்ந்து கொண்டு சாதியின் மணமுஞ் செய்வர்' என்று பெரியார் கூறுவதை நன்குணர்ந்து, ‡ மெய்வருத்தம் பசி முதலியவற்றைக் கருதாது, முதுமைப் பருவம் வருவதற்கு முன்னே விரைவாக அவ்வப்போது வேண்டும் தானியங்களையும், அவை விளைதற்குரிய நிலங்களையும், உடைமுதலியவற்றிற்கு வேண்டும் பொருள்களையும், பழிபாவங்களுக்குப் பயந்து தேடி, அவற்றைத் தக்கவாறு பாதுகாத்து வருபவர் இம்மையிற் புகழையும் மறுமையிற் புண்ணியலோகத்தையும் அடைவாரென்பது நிச்சயமாம்.

''உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந், தொழுதுண்டு பின்செல் பவர்' யாவருமுண்ணும்வகை உழுதலைச் செய்து, அதனாற்றமுழுண்டு வாழ்கின்றாரே தமக்குரியராய் வாழ்கின்றவர்; மற்றையாரெல்லாம்

---

‡ நுகர்வன - உணவிற்குரிய பொருள்கள்.

† பொன்னொடுமணி - தனமும் தானியமும்; மணியென்பது இங்குத் தானியமாம். தனதானிய சம்பத்தென்று அறிஞர் கூறுமாறுணர்க.

‡ மெய் - உடம்பு.

பிறரைத்தொழுது அதனாற்றாழ்முண்டு அவரைப் பின் செல்கின்றவர்."

"பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும், பொருளல்ல தில்லை பொருள்=ஒருபொருளாக மதிக்கப்படாதவரையும் மதிக்கப் படுவராகச்செய்யவல்ல பொருளையொழிய ஒருவனுக்குப் பொருளாவதில்லை" என்று திருக்குறள் கூறுவது இங்கு நன்குணர்தற்பாலதாம்.



### 1. ஆற்றுதல்.

" ஆற்றுத லென்பதொன் றலர்ந்தவர்க் குதவுதல். "

(இதன்பொருள்) இல்வாழ்க்கையை நடத்துதலென்று சொல்லுவது பிடித்தவர் (வறியவர்)க்கு யாதானுமொன்றை உதவுதலாம்.

### 2. போற்றுதல்.

"போற்றுத லென்பது புணர்ந்தாரைப் பிரியாமை."

(இ-ள்.) ஒன்றைப் பாதுகாத்தலென்று சொல்வது கூடினாரைப் பிரியாதிருத்தலாம்.

### 3. பண்பு.

"பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்."

(இ-ள்.) மக்கட்பண்பு என்று சொல்லப்படுவது உலகவொழுக்கத்தை யறிந்தொழுகுதலாம்.

### 4. அன்பு.

"அன்பெனப் படுவது தன்கிளை செறாமை."

(இ-ள்.) அன்பென்று சொல்லப்படுவது தன்சுற்றத்தாரைக்கெடா திருத்தலாம்.

5. அறிவு.

"அறிவெனப் படுவது பேதையார் சொன்னோற்றல்."

(இ-ள்.) அறிவென்று சொல்லப்படுவது அறியாதார் தன்னைப்பார்த்துச்சொல்லுஞ்சொல்லைப் பொறுத்துக்கொள்ளுதலாம்.

6. செறிவு.

"செறிவெனப் படுவது கூறியது மறாமை."

(இ-ள்.) ஒருவரோடு ஒருவர்க்கு உறவு என்று கூறப்படுவது கூறிய தொன்றைத் தாம் மறாதிருத்தலாம்.

7. நிறை.

"நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை."

(இ-ள்.) நிறையென்று சொல்லப்படுவது மறைந்தது ஒரு காரியத்தைப் பிறரறியாமலொழுகுதலாம்.

8. முறை.

"முறையெனப் படுவது கண்ணோடா துயிர்வெளவல்."

(இ-ள்.) முறையென்று சொல்லப்படுவது நமரென்று கண்ணோட்டஞ் செய்யாது அவர் செய்த குறைக்கேற்ப அவர் உயிரைக் கொள்ளுதலாம்

9. பொறை.

"பொறையெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்."

(இ-ள்) பொறையென்று சொல்லப்படுவது பகைவரைக்காலம் வருமளவும் பொறுத்திருத்தலாம்.

நல்லந்துவனார் கலித்தொகை - நெய்தற்கலி.



# அரசனும் - குடிகளும்.

"மன்னவர்க் கழகு செங்கோன் முறைமை", "சக்கர நெறிநில்" என்று பெரியாரருளிச் செய்திருப்பதை நாம் நன்கு சீர்தூக்கி நோக்குவோமாயின், அரசனது கடமை யித்தன்மையதா மென்பதும், குடிகளது கடமை யித்தன்மையதா மென்பதும் நமக்கு நன்கு விளங்குவனவாம். அரசன் தன்னுடைய கடமையையும், குடிகள் தம்முடைய கடமையையும் மறவாது மேற்கொண்டொழுகி வருவாராயின், அவ்விருதிறத்தார்க்கும் நன்மை யென்று சொல்லப்படுவன வனைத்தும் நிச்சயமாக வுண்டாவனவாம். அரசன் தன் குடிகளிடத்து அருளும், குடிகள் தம்மரசனிடத்து அன்புமுடையவரா யிருப்பாராயின், அவர்கட்குத் தீமை யுண்டாவது பெரும்பான்மையு மில்லையாம். ஒரு காட்டில் வசிக்கும் புலிக்கு அக்காடு காவலாகவிருப்பது போல, அப்புலியும் அக்காட்டிற்குக் காவலாக விருப்பதாம். *புலியைப் பிறர் கொல்லா திருப்பதற்குக் காரணம் காடு நெருக்கமா யிருப்பதேயாம்; காடு அழியா திருப்பதற்குக்காரணம் இக்காட்டில் புலி வசிக்கின்றதே யென்னும் பயத்தால் பிறர் வந்து, அதனை வெட்டா திருப்பதே யாம்.' புலியினுடைய இருப்புக் காட்டிற்கும், காட்டினுடைய இருப்புப் புலிக்கும் அத்தியாவசியகமாய் வேண்டுவனவாக விருத்தல் போல, அரசனுடைய இருப்புக் குடிகளுக்கும், குடிகளுடைய இருப்பு அரசனுக்கும் அத்தியாவசியகமாய் வேண்டுவனவாம். காடு நெருக்கமா யிராதவிடத்துப் புலிக்குக் கேடும், புலி பலவீனமான விடத்துக் காட்டிற்குக் கேடுமுண்டாவது நிச்சயமாம். காடு நெருக்கமா யிராதவிடத்துப் புலியைக் கொல்வதெளிதாம்; புலி

பலவீனமாய விடத்தோ, (அதனைக் கொன்று) காட்டை யழிப்ப தெளிதாம். காடுநெருக்கமாயும், புலி பல முடையதாயு மிருக்கு மளவும் புலியைக் கொல்வதும் அருமையாம்; காட்டை யழிப்பதும் அருமையாம். அரசனது நிலைமையையும் குடிகளது நிலைமையையும் யாம் நிதானமாக யூகித்து நோக்குவோமாயின், அவ் விருதிறத்தாரும் புலிபோலும் காடுபோலுமிருக்கின்றன ரென்பது நன்குவிளங்குவதாம். அரசன் குடிகளிடத்து அருளும், குடிகள் அரசனிடத்து அன்பு முள்ளவளவும் அவர்கள் அச்சமற்றவராய் வாழ்வது நிச்சயமாம் அரசனிடத்து அருளும்,குடிகளிடத்து அன்புமகுறையு மாயின், அரசன் கெடுவதும் நிச்சயமாம; குடிக ளழிவதும் நிசசயமாம். அரசன் தனகுடிகளிடத்து மாறாத அருளுடையவனு யிருப்பானுயின், குடிகள் தம் மரசனிடத்து மாறாத அன்புடையவரா யிருப்பா ரென் பது பிறழாத விஷயமாம். அரசன் தன் செங்கோல் முறைமை தவறுதொழுகுதலே அவன் தன் குடிகளிட த்து அருளுடையவனுக விருத்தலாம்; குடிகள் தம் மரசனது சக்கரநெறிநின் றெழுகுதலே அவர்கள் அரசனிடத்து அன்புடையவராக விருத்தலாம் அரச னிடத்து அருளும குடிகளிடத்து அன்பும் மாறுமா யின், அவர்கள் வசிக்கும் நாடு தீராதகலகத்திற்கு உறை விடமாக விருப்பதன்றி மற்றொன்றாக விருப்பதில்லை யாம்.

-செங்கோலென்பது நீதியாம்; முறைமை யென் பது நீதியைத்தவறாது செலுத்துதலாம். நீதியைத் தவ றாது செலுத்தித தன்குடிகளை யாளுமம அரசனிடத்துக் குடிக ளன்பில்லா திருப்பது ஒருகாலத்து மின்மையின்,

அரசன் தன் குடிகளிடத்து அருளுடையவனாயொழுகுதலே அவனுடைய கடமையாம். குடிகள் தம்மரசன் விதித்த விதிக்கு மாறுகாதொழுகி வருவாராயின், அவர்களிடத்து அரசனுக்கு வெறுப்பு எஞ்ஞான்றும் உண்டாவதில்லையாம். தம்மரசனது ஆக்கினை சக்கரவழியில் (நீதி வழியில்) நிற்பது குடிகளிடத்துப் பிறழாதிருக்குமாயின், அவர்கள் தம்மரசனது அருளுக்குப் பாத்திரராவர்; தன் குடிகளிடத்து நீதிசெலுத்துவதில் தவறாதிருப்பது அரசனிடத்துப் பிறழாதிருக்குமாயின், அவன் தன்குடிகளது அன்பிற்குப் பாத்திரனாவனென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு நம்முடைய கடமைக்கு மாறுகா தொழுகி வருவோமாயின், நாம் நம்மரசனது அருளுக்குப் பாத்திரராய் வாழ்வது தவறுவதில்லையாம். அரசனுடைய தவறு நம்முடைய தவற்றிற்கும், நம்முடைய தவறு அரசனுடைய தவற்றிற்கும் காரணமாயிருத்தலின், அரசன, குடிகளென்னுமிருதிறத்தாருள் ஒவ்வொருவரும் தத்தங் கடமையை மறவாது செய்து வருதல் வேண்டும். அரசன் தன்னுடைய கடமையைச் செய்யவில்லையே யென்று குடிகளும், குடிகள் தம்முடைய கடமையைச் செய்யவில்லையே யென்று அரசனுங் கருதித் தத்தங் கடமையைச் செய்யா தொழிவது ஒருபோதுங் கூடாது. அரசன் குடிகளென்னு மிருதிறத்தாருள் ஒவ்வொருவரும் தத்தங் கடமையைமறவாது செய்துவருவாராயின், நாடெங்கும் வாழ்ந்து நல முறுவதாம்.

அரசனுக்கு அருளாவது அவன் தன் குடிகள்மீது தொடர்பு பற்றாது இயல்பாகப் பிரியமுடையவனாகவிருத்தலாம்; குடிகளுக்கு அன்பாவது அவர்கள் தம்

மரசன் மீது தொடர்பு பற்றிப் பிரியமுடையவராக விருத்தலாம். அரசனும், குடிகளும் இவ்வாறிருத்தலே அவர்கள் தத்தங் கடமையைச் செய்து வருவதாம்.

அரசன் தன் குடிகள் மீது அருளுடையவனாகா திருப்பனாயின், அவர்கள் ராஜாங்க உத்தியோகஸ்தர், பகையரசர், கள்வர் முதலாயினோரும், துஷ்ட மிருகங்களுஞ் செய்யுந் தீங்கில்லாது வாழ்வது முடியுமோ? நாம் தீங்கில்லாது வாழவேண்டுமாயின், நம்முடைய கடமையை நாம் தவறாது செய்து வருதல் வேண்டும். நம்முடைய கடமையை நாம் தவறாது செய்து வருவோமாயின், அரசன் தன்னுடைய கடமையைத்தவறாது செய்வது நிச்சயமாம். "வைய மன்னுயி ராகவம் மன்னுயிர், உய்யத் தாங்கு முடலன்ன மன்னனுக்கு" என்று கம்பராமாயணங் கூறுவதை நோக்குவோமாயின், அருளுடைய அரசன் தன் குடிகளைத் தன்னுயிராகக் கொண்டொழுகுவா னென்பது நன்குவிளங்குவதாம். குடிகளாகிய உயிர் வசிப்பதற்குரிய வுடம்பு அரசனாக இருத்தலின், உடம்பும் உயிரும் போல அரசனும் குடிகளும் ஒத்து வாழ்வது அத்தியாவசியகமாம். "வேந்தன் சீறி னுந்துணை யில்லை" என்று பெரியாரருளியிருத்தலை நன்கு கவனித்து, சக்கர நெறிநின்றொழுகி வருகின்ற குடிகள் ஒருபோதும் தீங்கடைவதில்லை யென்பதை நாம் மறவாது மேற்கொண்டொழுகுதல் வேண்டும். குடிநலமில்லாநாடும் நீதியில்லாவரசும் சிறப்படைவதில்லை யென்பதை நன்குணர்ந்து, நம்மை யாண்டு வரும் நமது சக்ரவர்த்தியாரிடத்துப் பேரன்புடையவரா யிருந்தொழுகி வருவோமாயின், நாம் பெறவேண்டிய நன்மையென்பன வனைத்தையும் நிச்சயமாகப் பெறுதற் குரியவராவோம்.

அரசர் குடிகளது தவப்பயனாக வந்தவதரிக்கின்றமையின், அவரிடத்துக் குடிகள் உடல் பொருளாவி யென்னுமூன்றனையும் பேரன்புடன் சமர்ப்பணஞ் செய்தொழுகக்கடமைப்பட்டவரா யிருக்கின்றனர். இக்கடமையைக்குடிகள் எஞ்ஞான்று மறவாதிருத்தல் வேண்டும். அரசனும் நீதிநெறி தவறாது அரசு புரிந்து குடிகட்கு ஆவனவற்றைச் செய்யக் கடமைப்பட் டிருக்கின்றான். †முறை வேண்டினரும் குறைவேண்டினரும் கொற்றவ (அரச) னில்லாவிடத்துத் தீராத துன்பத்திற்கு ஆளாய் வருந்துவ ரென்பது சிதையாத சித்தாந்தமா மாகலின், முறைவேண்டுதலும் குறைவேண்டுதலு முடைய நமக்கோர் அரசன் இன்றியமையாது வேண்டும்; நாம் அவ்வரசன் விதித்த விதிக்கு மாறில்லாதொழுகி வருவோமாயின், அவனுடைய அருளும் நம்முடைய அன்பும் உடலும் உயிரும்போல இருந்து, ஆவனவற்றை யெல்லாம் நமக்குப் பயப்பனவாம். நமது சக்ரவர்த்தியாரவர்கள் முறை வேண்டினரையுங் குறை வேண்டினரையுங் கவனிக்கவேண்டியவாறு கவனித்து நம் மீது பெருங்கருணை செய்து வருதலினாற்றான், நாம் அவரிடத்துப் பூரண அன்புடையவரா யிருக்கின்றோம். அப்பூரண அன்பு நம்மிடத்து மாறாதிருக்குமாயின், நாம் மேன்மை யென்பன வெல்லாவற்றையும் பெறுதற்குத் தகுதியுடையவ ராவோம்.

"உலகத்தில் அரசனில்லாது போயின், பலமில்லாதவர் பலமுள்ளவர்மீ துள்ள பயத்தினா லழிந்து போவர்; ஆகையால், இவ்வுலக மழியாதிருத்தற் பொருட்டுக் கடவுள் அரசனைப் படைத்தார்"

---

† முறைவேண்டினர் - வலியவராற் றுன்பமடைந்தவர்; குறைவேண்டினர் - வறுமையடைந்து யாசித்தவர்.

"இந்திரன், வாயு, யமன், சூரியன், அக்கினி, வருணன், சந்திரன், குபேரனென்னு மிவர்களி னம்சங்களால் "அரசன் படைக்கப்பட்டான்".

"அரசன் இத்தேவர்களின் அம்சமாயிருக்கின்றமையால், மக்களியாவரினும் மிக்க சாமர்த்தியமுடையவனும் யாவரையும் ஆளுதற்குரிய வீரியமுடையவனுமா யிருக்கின்றான்".

"இவ்வரசன் சூரியனைப்போன்று தன்னைப் பார்ப்பவரது கண்களையும் மனத்தையும் தகிக்கின்றமையின், உலகத்திலொருவரும் அவனை நேரேநின்று பார்க்கற் குரியவராகா திருக்கின்றனர்."

"அவ்வரசன் தனது மகிமையால் சமயத்திற் கேற்றவாறு அக்கினியாகவும், வாயுவாகவும், சூரியனாகவும், சந்திரனாகவும், யமனாகவும், குபேரனாகவும், வருணனாகவும், இந்திரனாகவு மிருப்பான்."

அவ்வரசன் சிறுவனாகவிருப்பினும், அவனை மனிதனென்றவமானஞ் செய்தல் கூடாது; என்னை? மேன்மையுள்ள தேவர்களின் கூட்டமே அவ்வரசன் வடிவமாக விருக்கின்றதல்லவா?"

"அக்கினி அஜாக்கிரதையால் தன்னை நெருங்கி வந்தவனை மாத்திரஞ் சுடும்; அரசனென்னு மக்கினி கோபித்தாற் கொண்டானை, அவன் தனதானிய புத்திரமித்திர களத்திராதியரையு மழித்துவிடும்."

"அவ்வரசன் காரியாகாரியங்களையும், தனது சக்தியையும், தேச காலங்களையும் செவ்வையாக ஆலோசித்தறிந்து, தருமஞ் சித்திக்கற் பொருட்டு, பல வடிவங்களை யெடுத்துக்கொள்ளுகிறான்."

பரிபவனும்,
திருப்பணத்தை விரும்ப
கூடாது."

"அவ்வரசனை எவன் அறிவில்லாமையால் துவேஷிக்கின்றானோ, அவன் தானாகவே அழிந்து போகின்றான்; அரசனும் அவனழிவதைக்குறித்து ஆலோசிக்கின்றான்."

"ஆகலால், அவ்வரசன் எதனை யனுஷ்டிக்கவேண்டுமென்றும் எதனை நீக்கவேண்டுமென்றும் உத்தரவு செய்கின்றானோ, அவ்வுத்தரவை ஒருவரும் தடுத்தல் கூடாது."

என்று மனுதரும சாஸ்திரம் ஏழாவதத்தியாயத்தில் கூறுகின்றது.

## திருவாய் மொழி.

"திருவுடை மன்னரைக் காணிற் றிருமாலைக்
கண்டேனே யென்னும்."

## திருக்குறள்.

"வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி."
"இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கு முட்டாச் செயின்."

## புறநானூறு.

"மாண்ட, அறனெறி முதற்றே யரசின் கொற்றம்."

## சீவகசிந்தாமணி.

"உறங்கு மாயினு மன்னவன் றன்னொளி
கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்."

## பழமொழி.

"மறுமனத்த னல்லாத மாநலத்த வேந்தன்
உறுமனத்த னாகி யொழுகிற்—செறுமனத்தார்
பாயிரங் கூறிப் படைதொக்கா லென்செய்ப
ஆயிரங் காக்கைக்கோர் கல்."

## கம்பராமாயணம்.

"கோளு மைம்பொறி யுங்குறை யப்பொருள்
நாளுங் கண்டு நடுக்குறு நோன்மையின்
ஆளு மவ்வர சேயரசு".

## நீதிநெறிவிளக்கம்.

"மன்னர் புறங்கடை காத்து வறிதேயாம்
எந்நலங் காண்டுமென் றெள்ளற்க—பன்னெடுநாள்
காத்தவை யெல்லாங் கடைமுறைபோய்க் கைகொடுத்து
வேத்தவையின் மிக்குச் செயும்."

இப்பிரயோகங்கள் இங்கு நன்கு கவனித்தற் குரியனவாம்.

